# கல்கி

KALKI 8.8.93 ரூ. 3.00


சந்திப்பு :
ராம்
ஜெத்மலானி



# வறுமையினிடையிலும் வெற்றித் தங்கம்!

# Invest in EBF and watch your money grow !!!






## EBF FINANCE LIMITED

Corporate Off: 36, Krishnaswamy Avenue, Mylapore, Madras - 600 004.. Ph: 74082, 72149, 74401.
Delhi off: 1, Malcha Marg, Chanakyapuri, New Delhi - 110021. Phone: 3015674.
Branches: Bombay ● Bangalore ● Shimoga ● Calcutta ● Delhi ● Secundrabad ● Coimbatore ● Pondicherry ● Madurai ● Tirunelveli ● Trichy ●

Adinfix/EBF.93

**The Safest Place for Your Hard Earned Money.**

THE STATUTORY ADVT. INVITING DEPOSITS WAS PUBLISHED IN THE HINDU DT. 16-10-92.



# சூப்பர் செய்தி; ரீப்பர் கமெண்ட்!



செய்தி : டீ.வி நிகழ்ச்சியில் வந்த குடும்பத் தலைவி தலைக்கனம் பிடித்த கேரக்டர். டீ.வி. பார்த்துக் கொண்டிருந்த கணவன் சும்மா இராமல் தன் மனைவியைப் பார்த்து, ''உன்னைப் போல்தான் இவளும்'' என்று கூறப் போக, மனைவிக்குக் கோபம் வந்து, வார்த்தை தடித்து, நள்ளிரவில் கணவன் மனைவியைச் கத்தியால் அடித்துக் கொன்று விடுவதில் போய் முடிந்தது! இது நடந்தது போபாலில்.

கமெண்ட் : டீ.வி பார்ப்பது கண்ணுக்குக் கேடு என்பார்கள்; உயிருக்கே கேடு என்பது இப்போது தெரிகிறது.

● ● ●

செய்தி : பெங்களூரில் திடீரென்று நிறைய லாரிகள் பூசணிக் காய் ஏற்றிப் போக, யதேச்சையாக ஒரு போலீஸ்காரர் சந்தேகப்பட்டு ஆராய, பூசணிகளுக்குள் சிறிய அளவிலான சந்தனக்கட்டைகள்! லாரிக்காரர்கள் லாக்-அப்பில்!

கமெண்ட் : பூசணி உடைத்தால் திருஷ்டி போகும் என்பார்கள். இங்கே லாக்-அப் யோகமே அடித்திருக்கிறது!

● ● ●



செய்தி : ஒரு பெண் இரண்டு ஆண்களை ஒரே சமயத்தில் திருமணம் செய்து கொண்டது ஆச்சர்யம்தான். அதைவிட ஆச்சர்யம், மத்தியப் பிரதேசத்தில் ஒரு கிராமத்தைச் சேர்ந்த அப் பெண்மணி கிறிஸ்துவர். அவர் மணந்து கொண்ட ஆண்களில் ஒருவர் முஸ்லிம், இன்னொருவர் ஹிந்து!

கமெண்ட் : மத ஒற்றுமை தேவைதான்; அதற்காக இப்படியா!

● ● ●



செய்தி : தன்னா, நிலவரி கட்டவில்லை என்று வருவாய்த் துறையினர் போலீஸில் புகார் கொடுத்தனர். இது ராஜஸ்தானில் ஒரு கிராமத்தில் நடந்தது. போலீஸ், 'தன்னாவைக் கண்டு பிடிக்கவே முடியவில்லை' என்று கூறிவிட்டது. ஆனாலும் தன்னா மீது கேஸ்போட்டு அவருக்கு மூன்று மாதம் சிறைத் தண்டனை பெற்றுத் தந்தது! சூப்பர் தமாஷ் என்னவெனில், தன்னா இறந்து போய்ப் பல மாதங்களாகி விட்டன என்பது பின்னால் தெரிய வந்தது!

கமெண்ட் : 'இதில் யார் அதிகத் திறமைசாலி? வருவாய்த் துறை அதிகாரிகளா, போலீஸா?' என்று பட்டி மன்றமே நடத்தலாம்! சாலமன் பாப்பையாவுக்கு ஜோக் அடிக்க ஏகப்பட்ட வாய்ப்பு!

தொகுப்பு : கௌதம்ராம்

# கூண்டில் சுண்டெலி; சுதந்திரமாகப் பெருச்சாளிகள்!

நாம் வில்லன்களாக நினைக்கும் பாத்திரங்களுக்கும் இதயங்கள் உண்டு என்று கருதுகிறவர் ராம்ஜெத்மலானி. அரசு வழக்குரைஞர்களை எதிர்த்தே பழக்கப்பட்டவர். இவரது அப்பா, தாத்தா, கொள்ளுத் தாத்தா என்று பரம்பரையே வழக்கறிஞர்கள்தாம். பேச்சுப் போட்டிகள், பட்டிமன்றங்கள் வாயிலாக வாதத் திறமையை வளர்த்துக் கொண்ட இவர், சிறு வயதிலேயே சட்டத்துறையின் பெரும் புள்ளிகளால் கவரப்பட்டு, தந்தையின் எதிர்ப்பையும் மீறி, வழக்கறிஞராக உருவெடுத்தார். அறிவையும் ஆற்றலையும் வளர்த்துக் கொண்டிருக்குமளவுக்கு உயிர்களிடத்தில் அன்பையும் மனித நேயத்தையும் சேர்த்தே வளர்த்திருக்கிறார். அவரைச் சந்தித்த போது....

**கேள்வி :** 'இராமனைப்' பெயரில் கொண்ட நீங்கள் இராவணர்களுக்கு வக்காலத்து வாங்குவது ஏன்? உங்களுக்குப் பெயரிட்ட உங்கள் பெற்றோர் நிச்சயம், நீங்கள் நீதிக்கும் நேர்மைக்கும் துணைபோக வேண்டுமென்றுதான் விரும்பியிருப்பார்கள். ஆனால் அநியாயிகளுக்கும் வஞ்சகர்களுக்கும் துணைபோவது ஏன்?

**ராம் ஜெத்மலானி :** நீங்களே இப்படிப்பட்ட கேள்விகளைக் கேட்பது எனக்கு அதிசயமாக இருக்கிறது. தொன்றுதொட்டு மக்களிடையே உலவி வரும் மூடநம்பிக்கைகளில், இந்த நல்லவன் - நயவஞ்சகன் பற்றிய அனுமானங்களும் ஒன்று. யார் நல்லவன்? யார் நயவஞ்சகன்? அரசு ஒருவனை நல்லவன் என்று பறைசாற்றினால் அவன் நல்லவனாகி விடுவானா? வேறொருவனைக் குற்றவாளி என்றால் அவன் நேர்மையற்றவனாகி விடுவானா? குற்றம் சாட்டப்படுவதால் மட்டுமே ஒருவன் குற்றவாளி ஆகி விடுவதில்லை! சில சமயம் கீழ் கோர்ட்டுகளில் குற்றவாளி என தீர்ப்பளிக்கப்பட்டவன், மேல் கோர்ட்டுகளில் நிரபராதியாக வெளியே வருவான். இந்திரா காந்தி கொலையாளிகள் வழக்கில் இவ்வகை நீதி வழங்கப்பட்டிருக்கிறதே! எனவே, குற்றம் நிரூபணம் ஆகும் வரை அவன் நல்லவன்தான். குற்றம் நிரூபிக்கப்படாத நிலையில் அவன் என்னை நாடும் போது நல்லவனாகவே அணுகுகிறான். அப்படி என்னிடம் வருவோருக்காக வாதாட வேண்டியது என் கடமை. பிறர் கூற்றுக் கிணங்கி நாம் ஒருவனை இராமன் என்று போற்றுவதோ, இராவணன் என்று தூற்றுவதோ பேதைமைதான்! யார் இராமன் யார் இராவணன் என்பதை அறிவின் துணை கொண்டு பேதப்படுத்தும் முயற்சிதான் என் பணி!

**கேள்வி :** ராஷ்டிரபதி தேர்தலுக்குக் கட்சி சார்பற்ற வேட்பாளராக நீங்கள் போட்டியிட்ட போது, 'கொள்கைக்காகப் போராடுபவர்' என்று எண்ணத் தோன்றியது; ஆனால் சமூக விரோத சக்திகளுக்கு வழக்காடுவதன் மூலம், பணத்துக்காகப் போராடுபவரோ என்ற ஐயத்தைத் தூண்டுகிறீர்களே?

**ராம் ஜெத்மலானி :** இதில் முரணே இல்லை! என்றும் நான் கொள்கை வழி நிற்பவன்தான். 'ராஸ்கல்' என்ற சொல்லுக்கு, 'அரசால் அப்படி நாமகரணம் சூட்டப்பட்டவன்' என்று அகராதியில் பொருள் இருந்தால் மட்டுமே நான் நெறிமுறை தவறியவனாவேன். இந்த அரசு யாரை விட்டு வைத்தது? ஜெயப்பிரகாசரையே 'ஹிட்லர்',

'ஃபாஸிஸ்ட்' என்று தூற்றியது! உழவர்களுக்காகப் போராடிய சரத் ஜோஷியை தேசிய பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் கைது செய்தது. நாளைக்கு உங்களையும் என்னையும் கூடக் குற்றவாளி என்பார்கள். நமக்கென்று வாதாடுவதற்கு ஒருவர் இல்லை எனில், நாம் எல்லோருமே சமூக விரோதிகள் ஆக்கப்பட்டு விடுவோம். மேலும், குற்றம்சாட்டப்பட்ட ஒவ்வொரு மனிதனுக்கும், தான் குற்றமற்றவன் என்று நிரூபிக்க ஒரு வழக்கறிஞரைப் பெறும் உரிமை உண்டு. இது நமது ஜனநாயகக் கொள்கை. ஆக, எப்படிப் பார்த்தாலும், நான் கொள்கைக்காகப் போராடுபவன்தான்.

**கேள்வி :** குற்றம் சாட்டப்பட்டவர்கள் சார்பிலேயே பெரும்பாலும் நீங்கள் வாதாடுவதால், சமூகத்தில் உங்கள் 'இமேஜ்' பாதிக்கப்படுவதில்லையா?

**ராம் ஜெத்மலானி :** என் 'இமேஜை'ப் பற்றி நான் என்றும் கவலைப்பட்டதேயில்லை. உண்மையில் என் முதல் 'இமேஜ்' நான் ஒரு 'வழக்கறிஞன்' என்பதுதான். அந்த இமேஜ் எந்த சந்தர்ப்பத்திலும் கெட்டு விடாமல் காத்து வருவதில் நான் பெருமை கொள்கிறேன்.

**கேள்வி :** நாளையே சந்தனக் கடத்தல் மன்னன் வீரப்பன் பிடிபட்டால், அவனுக்கென்று வழக்காடுவீர்களா?

**ராம் ஜெத்மலானி :** ஏன் மாட்டேன்? வீரப்பன் என்னிடம் வந்து, 'ஐயா, நான் நிரபராதி! என்னைக் காப்பாற்றுங்கள்' என்று வேண்டினால், நிச்சயம் அவனுக்காக ஆஜராகுவேன்.

**கேள்வி :** துக்ளக் பத்திரிகையில் வரும் ஒன்னரைப் பக்க நாளேட்டில், நீங்கள், தாவூத் இப்ராஹிமுக்காக வழக்காடப் போவதாக விளையாட்டாகக் குறிப்பிட்டுள்ளார்கள். இதுவும் நிஜமாகலாமல்லவா?

**ராம் ஜெத்மலானி :** ஏன் ஆகக் கூடாது? தாவூத்தான் பம்பாய் 'குண்டு' வெடிப்புகளுக்குக் காரணமானவன் என்று யாரேனும் இட்டவட்டமாகச் சொல்ல முடியுமா? தாவூத் ஒரு கடத்தல் மன்னன். இந்தியாவுடன் கடத்தல் தொழில்புரியும் நாட்டம் அவனுக்குண்டு. அப்படியிருக்கையில் எதற்காக பம்பாயில் 'பாம்' போட்டு, தன் தொழிலை மந்தப் படுத்திக் கொள்ள வேண்டும்? உண்மையில், இந்த வெடிகுண்டு பற்றிய விசாரணை செல்லும் தடமே தவறானது என்று நான் சொல்வேன். தாவூத், மேமன் சகோதரர்கள் எல்லாம் சின்ன மீன்கள்தாம்! தூண்டில் போட்டவர்கள் வேறு யாரோ!

**கேள்வி :** அவர்களை உங்களால் அடையாளம் காட்ட முடியுமா?

**ராம் ஜெத்மலானி :** நிச்சயமாக! அவர்கள் முஸ்லிம் பழைமைவாதிகள். இந்தியாவில் இயங்கும் அடிப்படை இயக்கங்களோ அல்லது இரான், சிரியா நாடுகளைச் சேர்ந்த முஸ்லிம் தீவிர இயக்கங்களோதான் பம்பாய் குண்டுவெடிப்புகளுக்குக் காரணம். ஆனால் முஸ்லிம் மதவெறியர்களை அடையாளம் காட்டி, உண்மையை மக்களுக்குரைக்க, அரசுக்குத் துணிவில்லை.

**கேள்வி :** ஹர்ஷத் மேத்தாவின் வழக்கை எடுத்துக் கொண்டதற்கு விசேஷ காரணங்கள் ஏதும் உண்டா?

**ராம் ஜெத்மலானி :** நான் வக்கீல் என்

> ''நாளைக்கு உங்களையும் என்னையும் கூடக் குற்றவாளி என்பார்கள். நமக்கென்று வாதாடுவதற்கு ஒருவர் இல்லை எனில், நாம் எல்லோருமே சமூக விரோதிகள் ஆக்கப்பட்டு விடுவோம்.''



பதுதான் காரணம். எக்காரணம் கொண்டும், ஒரு வழக்குக்காக ஆஜராக முடியாது என்று ஒரு வக்கீலால் மறுதலிக்க முடியாது; சட்டப்படி அது குற்றம். தன்னை நாடிவரும் ஒவ்வொரு மனிதனுக்காகவும் வாதாட வேண்டியது ஒரு வக்கீலின் தலையாய கடமை. அரசுக்கு எதிராக வழக்காடக் கூடாதென்றால் எல்லோரும் பப்ளிக் ப்ராசிக்யூட்டர்களாகத்தானிருக்க வேண்டும்! ஹர்ஷத் மேத்தா குற்றம் சாட்டப்பட்டிருப்பவன்; அவனைக் குற்றவாளி என்று நிரூபிப்பது அரசின் கடமை! பெரும்பாலும் கூண்டில் அடைக்கப்பட்டிருப்பது சிறு எலியாகத்தானிருக்கும்; பெரும் பெருச்சாளிகள் வெளியே சுதந்திரமாக உலவிக் கொண்டிருக்கும். அவற்றைப் பொறி வைத்துப் பிடிப்பதுதான் வழக்கறிஞர் கடமை!

**கேள்வி :** பிரதமரைச் சந்தித்த பாகிஸ்தான் தூதுக்குழுவின் புகைப்படம் வெளியாகியிருப்பதால் வழக்கில் புதிய திருப்பங்கள் ஏற்பட்டிருக்கின்றனவா?

**ராம் ஜெத்மலானி :** சாதகமான திருப்பம்தான். அதை ''ப்ளோ-அப்'' செய்ததில், ஒருவர் கையிலிருந்த கடிகாரம் 11:45 என்று காண்பித்தது நேரத்தை. ஆக, நரசிம்மராவ் பாகிஸ்தான் தூதுக்குழுவை 11 மணிக்குப் பிறகுதான் சந்தித்தார் என்பது நிரூபணமாகியிருக்கிறதல்லவா? சிலர் நினைக்கிறார்கள் - ஒரே பொய் மீண்டும் மீண்டும் பல முறை சொல்லப்பட்டால் அது உண்மையாகி விடுமென்று! இப்படித்தான், பி.ஜே.பி., பதவி ஆசையினால் நரசிம்மராவுக்கு எதிராக ஹர்ஷத் மேத்தாவைத் தூண்டுகிறதென்று ஒரு பொய்யைப் பரப்பி, அதை உண்மை ஆக்கப் பார்க்கிறார்கள். ஹர்ஷத் மேத்தா கூட, நரசிம்ம ராவ் பதவி இறங்கினால், காங்கிரஸ் அரசு கவிழும்; தேர்தல்கள் நடக்கும்; பி. ஜே. பி. ஆட்சியைப் பிடிக்கும்; உடனே தன் மேலிருக்கும் வழக்குகளெல்லாம் வாபஸ் வாங்கப்படும் என்ற முட்டாள் தனமான கணக்கில் இருக்கிறார்! ஆனால் இவை அனைத்தும் மாயையே. எத்தனை முறை சொன்னாலும், பொய் பொய்தான்; உண்மை உண்மைதான்.

''ஏட்டு ஏகாம்பரம் வீட்டுல இருந்து வந்த சுரைக்காயை ஏண்டி வேண்டாம்னு சொல்லிட்டே?''

''ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவாதுன்னு சொல்லுவாங்களே!''

- சி. மயில்வாகனன்



**கேள்வி :** பி.ஜே.பிக்கு எதிர்காலம் இருக்கிறதா?

**ராம் ஜெத்மலானி:** ஒளிமயமான எதிர்காலம் தெரிகிறதே!

**கேள்வி :** மதவெறியைத் தூண்டும் கட்சி என்றொரு அவப்பெயர் அதற்கு இருக்கிறதே?

**ராம் ஜெத்மலானி :** அதெல்லாம் காங்கிரஸாரின் பீதி கலந்த பிதற்றல். ஒரு புத்தகத்துள் மதக்கோட்பாடுகளை அடக்கக் கூடிய மதங்கள்தான் மதவெறியர்களை உருவாக்க முடியும். இந்து மதமோ மிகவும் விசாலமானது; அதில், ஒரு கடவுளைக் கும்பிடலாம்; பல கடவுள்களை வணங்கலாம்; கடவுளே இல்லை என்றும் வாதிடலாம். எந்த ஒரு இந்துவாலும் மதவெறியனாக இருக்கவோ, மதவெறியைத் தூண்டவோ இயலவே இயலாது!

**கேள்வி :** அப்படியென்றால் 'ராம் ஜென்மபூமி' விவகாரம்? பாபர் மசூதியை இடித்தது...?

**ராம் ஜெத்மலானி :** அது டெக்னிகலாக, சட்டத்துக்குப் புறம்பான செயல்தான். ஆனால் இந்த விஷயத்தில் எனக்கு இஸ்லாமிய மதத் தலைவர்கள் மீது மட்டற்ற வருத்தம். சற்றே பெருந்தன்மையுடன் அவர்கள் நடந்து கொண்டிருந்தால், இவ்வளவு அசம்பாவிதங்கள் நிகழ்ந்திருக்காது. 'இது எங்கள் தொழுகைக்குரிய இடம்தான். ஆனால் நீங்களும் தொழ நினைத்தால் தாராளமாக வரலாம்' என்று கூறியிருக்கலாம். இறைவன் ஒருவனே என்ற மனப்பான்மையோடிருந்திருந்தால் அன்று மசூதி இடிக்கப்பட்டிருக்காது. 'இஸ்லாம்' என்பது மிகவும் அழகான, அற்புதமான மதம். அதனை சில தலைவர்கள், தங்கள் பதவி ஆசைக்காகப் பயன்படுத்துகிறார்கள். 'தலைமை'யைத் தக்க வைத்துக் கொள்ளவென்று, இன்றளவும் முஸ்லிம் இனத்தவரை வெளிச்சத்துக்கு வரவொட்டாமல், பின்தங்கிய நிலையிலேயே இருளடித்து வைத்திருக்கின்றனர்.

**கேள்வி :** தமிழக முதல்வர் ஜெயலலிதாவின் ஆட்சி பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

**ராம் ஜெத்மலானி :** நான் ஜெயலலிதாவின் வக்கீல் என்ற முறையில், அவரது ஆட்சியைப் பற்றித் தீர்ப்பளிக்கும் தகுதியை இழக்கிறேன். எனினும் ஒன்று சொல்வேன். ராஜீவுக்கு அவர் வேண்டப்பட்டவராக இருந்தவரையில், காங்கிரஸ்காரர்களுக்கு அவரைப் போன்ற பெண்மணி வேறொருவர் தரணியில் இருக்கவில்லை! இப்போது காங்கிரஸ்காரர்களுடன் தகராறு என்றதும் அவர் மிகவும் பொல்லாதவராகி விட்டாரா? ஆட்சியில் குறையிருந்தால் தீர்ப்பளிப்பது மக்கள் கையில் உள்ளதேயன்றி, காங்கிரஸ்காரர்கள் வசமில்லை.

**கேள்வி :** சமூகத்தில் இன்று, வக்கீல்களுக்கு அதிக வேலை வைக்குமளவுக்கு, ஊழல்களும் குற்றங்களும் மலிந்திருப்பதற்கு அடிப்படைக் காரணம் என்ன?

**ராம் ஜெத்மலானி :** முதற் காரணம், காங்கிரஸ்காரர்கள் குணம் கெட்டு, தரம்



"அந்த டாக்டர் தமிழ் மீடியத்துல எம். பி. பி. எஸ். படிச்சவராம்...!"

"அதுக்காக, வர்றவங்க கிட்டல்லாம் 'உங்க உடம்புல வைட்டமின் 'அ' குறைவா இருக்கு, 'ஆ' குறைவா இருக்குன்னு சொல்லணுமா என்ன...?"

- சீர்காழி வி. ரேவதி

தாழ்ந்தவர்களாகி வரும் அவலம்; இவ்வளவு ஊழல் மலிந்த அரசியல் கட்சியை நான் இதுவரை கண்டதில்லை! அரசியல்வாதிகளிடமிருந்து வெட்கம், மானம், சூடு, சொரணை போன்ற எல்லாம் விடைபெற்றுப் பல காலமாகிறது. சமூகத்தில் இன்று, அரசியல்வாதி என்பவன், 'திருடன்' என்ற அந்தஸ்தைத்தான் பெறுகிறான். அடுத்த காரணம் - நமது பொருளாதாரக் கொள்கைகள். அன்று நேரு காட்டிய வழி, நமது பொருளாதார வளர்ச்சிக்கு அடிகோலவில்லை. மூதறிஞர் ராஜாஜி சொன்னவற்றை அன்று உதாசீனப்படுத்தி விட்டு, இன்று அவர் பாதையில் செல்ல ஆசைப்படுகிறோம். நம் நாட்டில் ஆயிரம் ரூபாய்க்கு விற்கும் தங்கம், அகில உலக மார்க்கெட்டில் நூறு ரூபாய்க்கு விற்கிறதென்றால், அது கடத்தலுக்கே வழிவகுத்துக் கொடுக்கும். கடத்தல் வழியில் அடுத்துப் புகுவது லஞ்சம். மில்டன் ப்ரைட்மென், "லஞ்சம் என்பது ஒரு நாட்டின் பொருளாதாரக் கொள்கையின் பயனாய்ப் பிறப்பது" என்று திட்டவட்டமாய்க் கூறுகிறார். இந்த நிலையில் ஊழலும் குற்றங்களும் அதிகரிக்கத்தானே செய்யும்!

**கேள்வி :** பத்து ரூபாயுடன் பம்பாய்க்கு வந்தவர், இன்று ஒரு நாளைக்கு லட்ச ரூபாய் சம்பாதிக்கும் அளவுக்கு உயர்ந்தது எப்படி? உங்கள் இமாலய வெற்றியின் இரகசியமென்ன?

**ராம் ஜெத்மலானி :** உழைப்பு. கடினமான உழைப்பு! இத்தனை வருடங்களாக நான் உழைத்த உழைப்பின் பலனைத்தான் இன்று நான் அனுபவிக்கிறேன். ஒரு நாளைக்குப் பதினெட்டு மணி நேர உழைப்பென்பது வெற்றியின் முதல் இரகசியம். அடுத்தது எனது நேர்மையும் வாய்மையும். மூன்றாவதாக, கட்சிக்காரர்கள் மனத்தில் நான் விதைத்திருக்கும் நம்பிக்கை. என்னிடம் கேஸை ஒப்படைத்து விட்டால் தங்களுக்கு நியாயம் கிடைத்து விடுமென்று அவர்கள் மனத்தில் துளிர்விடும் நிம்மதி. இவற்றுடன் எனது நாவன்மையையும் சேர்த்துக் கொள்ளலாம். ஆனால், எந்த ஒரு வழக்கறிஞராலும் 'நாணயமின்றி' 'நாநயத்தால்' மட்டும் ஜெயித்து விட முடியாது என்பது என் எண்ணம்!

**கேள்வி :** வீட்டில் நீங்கள் ஒரு வக்கீலா? நீதிபதியா?

**ராம் ஜெத்மலானி:** நான் வீட்டில் அதிகமாக வாதம் செய்வதில்லை. அனாவசியமாக தீர்ப்புகளும் வழங்கிக் கொண்டிருப்பதில்லை. நான் மிகவும் அமைதியானவன். என்னை யாராவது வம்புக்கிழுத்தாலும் அவதூறாகப் பேசினாலும் கூட, அந்த நபர் ஏன் அப்படிப் பேசுகிறார், எது அவரை அப்படி நடந்து கொள்ளத் தூண்டியிருக்கிறதென்று நான் நிதானமாகச் சிந்தித்துப் பார்ப்பேன். என்னிடம் சகிப்புத் தன்மையும் உண்டு; மறந்து மன்னிக்கும் குணமும் உண்டு!

**கேள்வி :** இதுவரை நீங்கள் வாழ்ந்த வாழ்க்கை உங்களுக்கு ஒரு நிறைவைத் தந்திருக்கிறதா?

**ராம் ஜெத்மலானி :** வாழ்க்கையை நன்றாக அனுபவித்திருக்கிறேன். ஆனால் சில சமயம், தேவைக்கதிகமான சுகங்களை, வசதிகளை, ஆண்டவன் எனக்கு அளித்து விட்டானோ என்ற மன உளைச்சல்கள் அவ்வப்போது ஏற்படும். என் மனைவி மக்கள், என் வீட்டுப் பெண்டிர், உண்டு, உறங்கி, உடுத்திக் கொழுத்து, பின் இளைப்பதற்கென்று 'ஜிம்'மை நோக்கிப் படையெடுக்கையில், சோமாலியாவிலும், ஏனைய பின் தங்கிய நாடுகளிலும் மக்கள் உண்பதற்கும் உடுப்பதற்கும் எதுவுமின்றி, நிற்க நிழலுமின்றி, உயிருள்ள பிரேதங்களைப் போல் காட்சி அளிக்கையில் என் மனம் படும் வேதனை இருக்கிறதே...! அப்பப்பா... அதை வார்த்தைகளால் சொல்ல முடியாது.

**கேள்வி :** இந்த வயதிலும் இளமையின் சுறுசுறுப்புடன் நீங்கள் இயங்குவதற்குக் காரணம்...?

**ராம் ஜெத்மலானி :** நான் ஒரு பாட்மிண்டன் ப்ளேயர். பக்தி சிரத்தையுடன் விளையாடுவேன்; நிறைய புத்தகங்கள் படிப்பேன். ஆனால் மிகவும் முக்கியமான காரணம், எப்போதும் இளம் வயதினரின் கூட்டுறவிலேயே இருப்பதுதான்! "வயது ஏற ஏற, வயது குறைந்தவர்களுடன் பழகு" என்பதுதான் வெற்றிகரமான இளமையின் ரகசியம்!

பேட்டி : ஜெயஸ்ரீராஜ்

# வறுமையினிடையிலும் வெற்றித் தங்கம்!

பல நாடுகளுக்கு இடையிலான டிரையத்லான் போட்டியில் முதன் முதலாகத் தங்கம் பெற்ற இந்தியப் பெண் என்கிற பெருமையைப் பெற்றிருக்கிறார், சென்னையைச் சேர்ந்த செல்வி அமுதா.

டிரையத்லான் போட்டி என்பது நீச்சல் (1.5 கி.மீ.), சைக்கிள் ஓட்டுதல் (40 கி.மீ.), ஓட்டப் பந்தயம் (10 கி.மீ.) ஆகிய மூன்றையும் அடுத்தடுத்துச் செய்கிற போட்டி. இந்த மூன்றையும் யார் மிகக் குறைந்த நேரத்தில் அடுத்தடுத்துச் செய்து முடிக்கிறார்களோ அவர்களுக்கே தங்கப் பதக்கம்.

சென்ற மாதம் சீனாவில் நடந்த ஆசிய நாடுகளுக்கிடையிலான இரண்டாவது டிரையத்லான் போட்டியில் இந்த மூன்றையும் செய்து முடிக்க அமுதா எடுத்துக் கொண்ட நேரம், இரண்டு மணி, இருபத்தைந்து நிமிடம், நான்கு வினாடிகள்.

''இன்னும் கூட குறைந்த நேரத்தில் செய்து முடித்திருப்பேன். ஆனால், சீனாவில் தங்கியிருந்த போது, ஆமைக் கறி அது இது என்றுதான் சாப்பிடக் கிடைத்ததால், நான் வேறு வழியின்றி வெறும் ரொட்டியையே சாப்பிட்டுக் கொண்டிருக்க வேண்டியதாயிற்று. அதனால்தான் இவ்வளவு அதிக(!) நேரம் எடுத்துக் கொள்ள வேண்டியதாயிற்று!'' என்கிற அமுதாவின் அடுத்த குறி, 95-ல் லண்டனில் நடக்கவிருக்கும் உலகப் போட்டி. அதன் பிறகு ஒலிம்பிக்.

இத்தனைக்கும் அமுதா மிகவும் சாதாரண மீனவக் குடும்பத்தைச் சேர்ந்த பெண்தான். அப்பா சந்திரன் ஷெனாய் நகரிலுள்ள நீச்சல் குளத்தில், நீர் சுத்திகரிப்பு நிலைய ஆபரேட்டர். அதுவும் தினக்கூலி. அம்மா குப்பு, கரும்புச்சாறு விற்கிறார்.

''இந்த நிலையில் உங்கள் பெண்ணை எப்படி ஆசிய அளவில் தங்கம் வெல்லச் செய்ய முடிந்தது?''

''நான் நீச்சல் குளத்தில் வேலை பார்ப்பதால், பல வசதியான வீட்டுப் பிள்ளைகளும் பெண்களும் வந்து, நீச்சலை ஒரு பொழுதுபோக்காகவும் ஓர் உடற்பயிற்சி மாதிரியும் செய்து விட்டுப் போவதைப் பார்த்துப் பார்த்து, நாமும் ஏன் நம் பெண்ணை ஒரு நீச்சல் வீராங்கனையாக்கிக் காட்டக் கூடாது என்று யோசித்தேன்.

''அதன் விளைவாக எட்டு வயதாக இருந்த அமுதாவை, இலவசமாக அனுமதிக்கும் அண்ணா நீச்சல் குளத்திற்கு அழைத்துச் சென்று பயிற்சி பெறச் செய்தேன். அவள் மிகவும் அற்புதமாக நீச்சல் கற்றுக் கொள்ள ஆரம்பித்தாள். போட்டிகளிலும் வெற்றி பெற ஆரம்பித்து விட்டாள். இந்தியா சிமெண்ட்ஸ் நிறுவனமும் அமுதாவுக்கு உதவ முன்வந்தது. மாநில விளையாட்டுக் கவுன்சிலைச் சேர்ந்த கோச் வீரபத்திரனின் தீவிர

◆ வெற்றிக் கோப்பைகளுடன் அமுதா





* குடும்பத்தோடு...

பயிற்சியும் கிடைத்ததால், இன்று சீனா வரை சென்று ஜெயித்து வந்திருக்கிறாள்!'' என்கிறார் அமுதாவின் தந்தை சந்திரன்.

லேடி வெலிங்டன் மேல்நிலைப் பள்ளியில் ப்ளஸ் டூ படிக்கும் அமுதாவுக்கு இப்போது பயிற்சி செய்யத் தினமும் காலையில் இரண்டரை மணி நேரமும் மாலையில் இரண்டரை மணி நேரமும்தான் கிடைக்கிறது என்பது ஒரு பெரிய குறையாகவே இருக்கிறது.

''நான் சீனாவில் சந்தித்த மற்ற ஆசிய நாட்டுப் பெண்களெல்லாம் தினமும் பத்து மணி நேரம் பயிற்சி செய்வதாகக் கூறினார்கள். நானோ ஐந்து மணி நேரம்தான் செய்கிறேன். இந்த நிலையிலிருந்தால் உலகப் போட்டியில் எப்படி வெற்றி பெற முடியும்? எனவே, எனது பள்ளித் தலைமையாசிரியையிடம் சொல்லி, எனது வகுப்புகளுக்கான நேரங்களில் சலுகை காட்டச் சொல்லப் போகிறேன்!'' என்கிறார் அமுதா.

''விளையாட்டுப் போட்டிகளுக்குத் தினசரி பயிற்சி என்பது மிக மிக முக்கியமானது. ஆயினும் தினசரி பத்து மணி நேரப் பயிற்சி செய்வதற்கு அமுதாவின் உடலில் சக்தி இருக்குமா என்பது சந்தேகம்தான். அதற்கெல்லாம் மிகவும் சத்தான உணவு வகைகளைச் சாப்பிட வேண்டும்!'' என்கிறார் கோச் வீரபத்திரன்.

பயிற்சியாளர் வீரபத்திரனின் கூற்றை அமுதாவின் தந்தை சந்திரனும் ஒப்புக்கொள்கிறார். ''நானோ தினக்கூலி. இந்த நிலையில் கோச்சுகள் சிபாரிசு செய்கிற உணவு வகைகளையெல்லாம் என்னால் எப்படித் தினமும் வாங்கித்



* கோச் வீரபத்திரன்



* பி. ஆறுமுகம்

தர முடியும்? தினமும் காலையில் பழையது தான். வாரத்திற்கு ஒருமுறையோ இருமுறையோ மீன் வாங்கிச் சமைக்கிறோம். அமுதா தவிர, எனக்கு மேலும் மூன்று குழந்தைகள் இருக்கும் போது, நான் இவளுக்கு மட்டும் எப்படி தனியாகச் சமைத்துப் போட முடியும்?'' என்கிறார் சந்திரன்.

தந்தையின் கவலை இப்படியென்றால், தாய் குப்புவின் கவலை வேறு மாதிரி. ஒரு வயசுப் பெண் இப்படி நீச்சலுடைகளையெல்லாம் அணிய வேண்டியிருப்பதால், தமது சொந்தக்கார ஜனங்கள் என்ன சொல்லுவார்களோ என்கிற கவலை அவருக்கு. அமுதாவின் வெற்றிகளைக் கண்டு கண்டு மற்றவர்களெல்லாம் பாராட்ட' ஆரம்பித்த பிறகுதான் அந்த மாதிரியான கவலைகளெல்லாம் எத்தனை பத்தாம் பசலித்தனமானது என்பதை உணர ஆரம்பித்தார்!



"என்னப்பா பால் விலையைத் திடீர்னு ரெண்டு ரூபா ஏத்திட்டே....?"
"என்ன பண்றதுங்க, தண்ணி பஞ்சம். இப்போ மினரல் வாட்டர்லே கலந்து கொண்டு வரேன்!"

- கே. சீட்ரா.

"ஆயினும் அவள் சீனாவுக்குச் சென்றிருந்த போது எனக்கு ரொம்பவும் கவலை தான். கண்காணாத தேசத்துக்குச் சென்று அவள் நல்லபடியாகத் திரும்பி வர வேண்டுமே என்று ஒவ்வொரு நிமிஷமும் கவலைப்பட்டுக் கொண்டிருந்தேன். தங்க மெடல் வாங்கியதாகச் சொன்னார்கள். எனக்கு ஒரே சந்தோஷம். அவள் திரும்பி வந்ததும் எங்கள் மீனவக் குப்பத்தில் வரவேற்பெல்லாம் கொடுத்ததைப் பார்த்து, எனக்கு ரொம்பவும் தைரியமாகி விட்டது. இனி அமுதா என்னவெல்லாம் செய்ய இஷ்டப்படுகிறாளோ, அதுதான் என் இஷ்டமும்!" என்கிறார், அமுதாவின் தாய் கண்களில் பெருமிதம் பொங்க!

சீனாவில் நடந்த இந்தப் போட்டியில் நான்காவதாக வந்த பி. ஆறுமுகமும் மீனவக் குப்பத்தைச் சேர்ந்த இளைஞர் தான். இருவருக்குமான செலவுகளை இந்தியா சிமெண்ட்ஸ் நிறுவனம்தான் செய்து கொண்டிருக்கிறது. ஆனால், அரசாங்கம் என்ன செய்து கொண்டிருக்கிறது?

இந்தக் கேள்வியைப் பேனா பிடித்தவர்கள் மட்டும் கேட்டுக் கொண்டிருந்தால் போதாது. வோட்டுப் போடுபவர்களும் சேர்ந்து கேட்க வேண்டும்.

- இளங்கோவன்

அட்டை (அமுதா) வண்ணப்படமும்
மற்ற படங்களும் : கோபிநாத்



# கும்பகோணம் வாசகர்களுக்கு ஓர் அழைப்பு!

கல்கி கும்பகோணம் சிறப்பிதழ் உங்கள் தயாரிப்பாக உருவானால் அதில் என்னென்ன விஷயங்கள் இடம்பெற விரும்புவீர்கள்...?

- உங்கள் ஊரின் பல்வேறு சிறப்புக்களை உலகறிய கட்டுரையாக எழுதலாம்.
- கும்பகோணத்தின் முன்னணி மனிதர்களைப் பேட்டி கண்டு எழுதி அனுப்பலாம்.
- யாரும் அறியாது அமைதியாகச் சேவை செய்து வருபவர்களை அறிமுகப்படுத்தலாம்.
- தொழில் வளம், மண் வளம், கலை வளம் பற்றிக் குறிப்புகள் அனுப்பலாம்.
- மண் வாசனை கமழும் சிறுகதைகளையும் கவிதைகளையும் எழுதலாம்.
- வட்டார நகைச் சுவையை விட்டு விடாமல் துணுக்குகள், சிரிப்புக் கட்டுரைகள் இடம்பெறச் செய்யலாம்.
- இன்னும் கும்பகோணம் தொடர்பாக என்னென்ன தோன்றுகிறதோ எழுதலாம்.

கும்பகோணம் வாசிகளே தயாரிக்கும் கும்பகோணம் சிறப்பிதழுக்கு உங்கள் கதை, கட்டுரை அல்லது துணுக்குகளை 20.8.93-ம் தேதிக்கு முன்னதாக அனுப்பி வையுங்கள்.

தேர்ந்தெடுக்கப்படும் படைப்புகள் கல்கியில் பிரசுரமாகிச் சன்மானம் பெறும். ஆசிரியர் குழு தேர்ந்தெடுக்கும் மிகச் சிறந்ததொரு படைப்புக்குச் சிறப்புப் பரிசும் உண்டு.

*மறக்க வேண்டாம்! கடைசித் தேதி : 20.8.93*

- ஆசிரியர்

# தமிழை உலகமறியச் செய்தவர்!

**சிகாகோ பல்கலைக் கழகத்தில் தெற்காசிய ஆய்வுப் பிரிவில் பேராசிரியராகப் பதவி வகித்த ஏ.கே. ராமானுஜன் ஜூலை 13-ம் தேதி மறைந்த போது அவருக்கு வயது 65. பன்மொழிப் புலவராக விளங்கிய அவருடைய ஆங்கில மாக்கம் சங்கப் பாடல்களையும் நம்மாழ் வார் பாசுரங்களையும் கர்னாடக 'வசன' தத்துவக் கவிதைகளையும் உலகின் பல நாடுகளில் பிரபலப் படுத்தியிருக்கிறது.**



ஒரு நாளின் பெரும் பகுதியை நான் 'கணையாழி' அலுவலகத்தில் போக்கிய 1971-ம் ஆண்டு. ராமானுஜனிடமிருந்து ஒரு கடிதம். ''மிகவும் அவசரம். எனக்கு நா. வானமாமலை பதிப்பித்த 'கட்டபொம்மன் கதைப் பாட்டு' உடனே தேவைப்படுகிறது. என்.சி.பி.எச். வெளியிட்ட நூல். பல காலமாகவே பிரதிகள் இல்லை என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். இப்போதும் இல்லை என்றுதான் பதில் கிடைக்கும். ஏதாவது நூலகத்தில்தான் முயற்சி செய்ய வேண்டும். விமானத் தபால் மூலம் அனுப்பவும். நான் பிரதி எடுத்துக் கொண்டு உடனே திருப்பி அனுப்பி விடுகிறேன்.''

புத்தகம் நல்ல வேளையாக மத்திய நூலகத்தில் கிடைத்தது. அந்த நாளில் அமெரிக்காவுக்கு விமானத் தபாலில் புத்தகம் அனுப்ப ரூ 20/- செலவாகியது. இருபது நாளில் புத்தகம் திரும்பி வந்து விட்டது. நூலகத்தில் ஒரு வாரத்துக்கான அபராதம்.

இருபது ஆண்டுகள் கழித்தும் ராமானுஜனுக்குப் புத்தகங்கள் தேவைப்பட்டது. அவருக்குப் புத்தகங்களின் தேவை எப்போதும் இருந்தது. உண்மையான கல்விமானுக்கு ஓய்வென்றும் இனி போதும் என்றும் உண்டோ?

நான் அவரை முதலில் சந்தித்த 1967-68 ஆண்டுகளில் அவருடைய ஆங்கிலக் கவிதைத் தொகுப்பு ஒன்றும் சங்கப் பாடல்களின் ஆங்கில மொழிபெயர்ப்பு நூலும் வெளியாகியிருந்தன. அவருடைய கன்னடக் கவிதைகளின் தொகுப்பு அச்சிலிருந்தது. 'சமஸ்காரா' நாவலை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கத் தொடங்கியிருந்தார். அவருடைய கதைகளையோ கவிதைகளையோ அவரே மொழிபெயர்ப்பதில் நாட்டம் கொள்ளவில்லை. (நான் அப்

**அசோகமித்திரன்**

போது படித்திருந்த அவருடைய ஒரே சிறுகதை வேறொருவரால் ஆங்கிலமாக்கப் பட்டிருந்தது.) நல்ல ஆங்கில உரைநடை எளிதில் சாதிக்கக்கூடியதல்ல என்றார். 'இந்திய ஆங்கிலம்' அவருக்குக் கூச்சத்தை உண்டுபண்ணியது.

இந்தியாவில் அறிவு ஜீவி என்றால் நாட்டுப் பாடலையும் தெருக்கூத்தையும் போற்ற வேண்டும் என்று எண்பதுகளில் அடித்த அலையை அவர் அறுபதுகளிலேயே எதிர்பார்த்திருக்க வேண்டும். அப்போதி லிருந்தே அவர் வாய்வழிக் கதைகளில் கவனம் செலுத்தினார். அங்கொன்றும் இங் கொன்றுமாக டேப் ரிக்கார்டர்கள் இந்தியா வுக்கு வரத் தொடங்கியிருந்தன. ராமா னுஜன் அவர் பதிவு செய்திருந்த சில கதை களை என்னை கேட்கச் செய்தார். நாங்கள் இருவருமாக லா.ச.ராவை பார்க்கப் போனோம். அந்த நாளில் லா.ச.ராவைப் பார்க்க வேண்டும் என்று வரும் வெளி யூர்க்காரர்கள் முதலில் என் வீட்டுக்கு வரு வார்கள்.

சூழ்நிலை மனிதரிடம் ஏற்படுத்தும் மாற்றங்களை ராமானுஜன் கூர்ந்து கவ னித்து வந்தார். அப்போது அவருடைய மக னுக்கு ஐந்து வயதுதானிருக்கும். ஆனால் அமெரிக்காவில் மூன்று நான்கு ஆண்டுகள் கழித்து விட்டான். அப்பாவிடம் ஏதோ கோபம், "You hurt my feelings," என்றான். எனக்கும் ஒரு சிறுவன் ஒரு நுட்பமான மன நிலையைச் சொற்களால் விவரிக்க முடிந் தது குறித்து வியப்புத்தான். ராமானுஜனுக் கும் வியப்பு. இந்தியாவில் வளர்ந்த குழந்தை இப்படிச் சொல்லுமா? "நான் உன்னோடு பேச மாட்டேன், போ," என்று சொல்லும். "என்னோடு பேச வேண்டாம், போ," என்றும் சொல்லலாம். "என் உணர் வுகளை வருத்தியிருக்கிறீர்கள் என்று எனக் குக் கூடச் சொல்லத் தோன்றியிருக்காது," என்று ராமானுஜன் சொன்னார்.

இலக்கியத் துறையில் அடக்கமாக இருப்பவர்கள் அழிந்துத் தேய்க்கப்படுவது அவருக்கு வருத்தம் தந்தது. "ஒரு படைப்பை ஒழுங்காக எழுதத் தெரிய வில்லை; அரசியல் செல்வாக்கையும் படா டோபத்தையும் கொண்டு இவர்கள் எப்படி பவனி வருகிறார்கள், பார்!" என்று ஒரு சந்தர்ப்பத்தில் கூறினார்.

உலகத் தமிழ் மாநாடு 1973ல் யாழ்ப் பாணத்தில் நடப்பதாக ஏற்பாடு. ஆனால் இலங்கை அரசு வெளிநாட்டுப் பிரதிநிதி களை ஏதாவது காரணம் காட்டி நாட்டி லேயே நுழைய விடவில்லை. மாநாட்டில் கலந்து கொள்ளாமல்தான் ராமானுஜன் சிகாகோ திரும்ப வேண்டியிருந்தது.

ராமானுஜனின் ஆங்கிலமாக்கம் குறித்துக் கடந்த சில ஆண்டுகளில் கருத்து வேற்றுமை தோன்றியிருந்தது. நிறையப் பேர் மொழிபெயர்ப்புத் துறைக்கு வந்து விட்டார்கள். எந்த மொழிபெயர்ப்பாளருக் கும் இன்னொருவருடையது பிழைபட் டிருப்பது போலத்தான் தோன்றும். ராமானு ஜன் மொழிபெயர்ப்பில் தனித்துவமுள்ள தோர் வடிவத்தைப் பின்பற்றினார். ஆங் கிலம் மட்டுமே பரிச்சயமுடையவர்களிடம் அவருடைய மொழிபெயர்ப்பு நெருக்க மான உணர்வு ஏற்படுத்தியது. கன்னட 'வசன' கவிதைகளை அவர் ஆங்கில மாக்கம் செய்தது அவருக்கு அமெரிக்காவில் உயரிய இலக்கியப் பரிசாகிய 'தேசிய நூல் விருது' பெற்றுத் தந்தது. Speaking of Siva என்று தலைப்பிட்ட அந்த நூல் அவருடைய மொழிபெயர்ப்பு நூல்களிலேயே மிகவும் சிறப்பானது.

ராமானுஜனின் ஆங்கிலக் கவிதைகள் பல இலக்கியத் தொகுப்புகளில் இடம் பெற்றிருக்கின்றன. மாதிரிக்கு ஒன்று :

கடைத்தெரு ஓரமாக
நடந்து செல்லும் போது
மூடிய கடையின்
கண்ணாடியில் என் முகமே
ஓர் அந்நியன் முகமாவது கண்டு
திடுக்கிட்டேன்.
முகத்துக்குக் கீழே
கையொப்பம் -
என் தந்தையுடையது.

படம் - நன்றி : "ஹிந்து"

அடுத்த இதழில்....

- தி. மு. க. வில் பிளவா?
  - கலைஞர் பேட்டி
- ஆடை ஏற்றுமதி : பெண்களால்தான் வெற்றி!





கட்சிக்குள் கொந்தளிப்பு




ஒரே அடிக்கா அடிக்கியாச்சு!
போபர்ஸ் ஊழல்
நாடாளு மன்றக் கூட்டுக்குழு அறிக்கை






அடிச்சுக்கிட்டே போங்க, எழுதிக்கிட்டே வர்றேன்...
புதிய சாட்சியங்கள், லஞ்சம் வாங்கிய நாலு மந்திரிகள்
அயல் நாட்டு வங்கிகளில் அரசியல் வாதிகளின் பணம்
த்திர ஊழல்
ஒரு கோடி ஊழல்
சுத்தமா வெள்ளை அடிச்சு பூசி மெழுகிடலாம்...



**கல்கி**



1993
ஆகஸ்ட் 8
மலர் : 52
இதழ் : 2
ஸ்ரீமுக
ஆடி 23

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா. - பாரதியார்.

# ஒரு எம்.பி.யின் விலை என்ன?

திக்குமுக்காடி, 'தப்பித்தேன் பிழைத்தேன்' என்று பதினாலு வோட்டு வித்தியாசத்தில் பதவியைத் தக்கவைத்துக் கொண்டிருக்கிறார் நரசிம்மராவ். இதற்காக அவர் தந்திருக்கும் விலை, சில எம்.பிக்களை வழிக்குக் கொண்டு வர ஆன செலவு மட்டுமல்ல; பொது மக்கள் பார்வையில் அவருடைய 'இமேஜ்' முன்னிலும் கோரமாகி விட்டதும் கூடத்தான். போஃபர்ஸ் ஊழல், செயின்ட் கிட்ஸ் விவகாரம், நில உச்சவரம்பு வழக்கு, கோல்ட் ஸ்டார் தயிடு தந்தம், பங்கு மார்க்கெட் ஊழல்; ஒரு கோடி ஸூட்கேஸ் ஊழல் முதலிய வற்றோடு, இப்போது எம்.பிக்களை விலைபேசிய அநாகரிகமும் சேர்ந்து கொள்கிறது. அஜித்சிங் கோஷ்டியின் ஏழு எம்.பிக்கள் ஆதரவு தராமலிருந் திருந்தால் காங்கிரஸ் ஆட்சி கவிழ்ந்து போயிருக்கும். அந்த ஏழு பேரைக் கவர கையாளப்பட்ட தந்திரங்கள், வெளிப்படையாகவே நடந்த பேரங்கள், வற் புறுத்தல்கள் எல்லாம் அருவருப்பின் உச்சகட்டம்.

அ.இ.மு.க. எம்.பிக்களையும் இவர்கள் ஆசை காட்டி இழுத்து விடா மலிருக்க தமிழகத்திலிருந்து காவல் படை போய் அவர்களை ஆட்டு மந்தை போல் கட்டிக் காக்க நேர்ந்தது என்னும் போது, எந்த அளவுக்குப் பணத்தாசை விளையாடியிருக்கிறது என்பதை எளிதில் ஊகிக்கலாம்.

நரசிம்மராவ் விட்டுக் கொடுத்து, வேறு ஒரு நாடாளுமன்றத் தலைவரைக் காங்கிரஸ் தேர்ந்தெடுக்க வழிவகுத்திருந்தால் இந்த நம்பிக்கையில்லாத் தீர்மானமே வலுவிழந்து இருக்கும். காங்கிரஸ் ஆட்சி நிலைப்பதுடன் அதன் கௌரவமும் உயர்ந்திருக்கும். ஆனால் முன்பே செய்திருக்க வேண்டிய இந் தக் காரியத்தைக் கடைசி நிமிஷ முயற்சிக்காகக் கூட நிறைவேற்ற ராவ் சம் மதிக்கவில்லை; பிடிவாதமாக இருந்து விட்டார்.

நாடு மறுபடி ஒரு தேர்தலை உடனடியாக சந்திக்க நேராது என்பதும், அரசு தற்போது அமுல்படுத்தியுள்ள பொருளாதாரக் கொள்கைகள் மாற்றமின்றித் தொடரும் என்பதும், இன்று நாடாளுமன்றத்தில் மைனாரிடி கட்சியாக விளங் கும் பி.ஜே.பியை ஒரு வேளை ஆட்சி அமைக்கச் சொல்ல வேண்டிய ஓர் இக்கட்டிலிருந்து ராஷ்டிரபதி தப்பினார் என்பதும் ஓரளவு ஆறுதல். இதற்கு மறுபுறமாக, ஒரு கட்சியை உடைத்து அடைந்த இந்த வெற்றி காரணமாக தார்மிக ரீதியில் காங்கிரஸும் அதன் தலைவர்களும் மக்களின் நம்பிக்கையை அடியோடு இழந்து விட்டிருக்கிறார்கள். இதன் பிரதிபலிப்பைத் தேர்தல் நடக் கும் போது நிச்சயம் காண்பார்கள்.

வெட்கம், மானம் போன்ற உணர்வுகள் இன்றி இன்று காங்கிரஸ் கூனிக் குறுகுவதற்குப் பதில் பெருமிதப்பட்டு மகிழலாம். ஆனால் தார்மிக பலத் தைத் தாம் முற்றிலும் இழந்து நிற்பதை நரசிம்மராவ் சீக்கிரமே உணர்வார். அவரது கட்சிக்குள்ளேயே இனி அதிருப்தியும் எதிர்ப்பும் அவருக்கு மேலும் அதிகமாகும். அரசு அதிகாரிகளுக்கு அவரிடம் மதிப்பு முன்னிலும் குறைந்து போகும். எதிர்க்கட்சிகளிடையே பல வித்தியாசங்கள் இருந்தாலும் நரசிம்ம ராவைப் பதவி இறக்கம் செய்வதில் முன்னிலும் தீவிரம் காட்டுவார்கள். ஏன், அயல்நாட்டுத் தலைவர்கள் கூட ராவை அலட்சியமாகத்தான் நோக்குவார் கள். ஒவ்வொரு நாளும் வேதனை நிரம்பியதாகத்தான் பிரதமருக்கு இருக் கும்.

மெஜாரிட்டி என்பது எப்போதுமே தர்ம நியாயமாக அமைந்து விடுவ தில்லை. ஆனால் தர்மத்துடன் இணைந்த மெஜாரிட்டிக்குத்தான் பலம் உண்டு. ஒரு சமயம் நேருஜி அயல் விவகாரத் துறையில் ஒரு பிரச்னையை ஆராய்ந்த போது ராஜாஜியும் அழைக்கப்பட்டு வந்திருந்தார். அவர், நேருஜியின் கருத் துக்கு நேர்மாறான எண்ணத்தை வெளிப்படுத்தினார். நேரு அதிகாரிகள் பக் கம் திரும்ப, அவர்கள் அனைவரும் பிரதமர் நேருவையே ஆதரித்தனர். ''பார்த் தீர்களா ராஜாஜி, மெஜாரிட்டி என் பக்கம்'' என்றார் நேரு. ''ஆமாம் ஜவாஹர் லால், மெஜாரிட்டி உங்கள் பக்கம்தான்; ஆனால் தர்மநியாயமும் புத்திசாலித் தனமும் என் பக்கம்'' என்றார் ராஜாஜி. நேரு கோபப்படவில்லை. சிரித்த படியே ராஜாஜியின் கருத்தை ஏற்றார். அத்தகைய பெருந்தன்மை இன்று நம் தலைவர்களிடம் கிடையாது.

இன்றைய மெஜாரிட்டி வெற்றி கானல் நீர் போன்று மாயையானது; அதர்மமான முறையில் அடையும் வெற்றிகள் நிலைப்பதில்லை என்பதை நரசிம்மராவ் சீக்கிரமே உணர்வார்.

# பஸ் Talk



"இன்னாபா முன்சாமி இம்மா லேட்டு?"

"அர அவுருக்கே இப்படிக் கூவுறியே... கவுருமெண்ட்லேருந்து ஒரு எம். எல். ஏ வுக்கு லட்டர் போடறதுக்கே மூணு வருஷம் ஆச்சாம்!"

"அப்படி இன்னாபா லட்டரு?"

"அப்படிக் கேளு... கேரளாவுல தினகரன்னு ஒரு காங்கிரஸ் எம்.எல்.ஏ. அவரு, வீட்டு வசதித் தொறைக்கு அரசாங்கம் எம்மாம் பணம் ஒதுக்குச்சுன்னு சட்டசபையில் கேள்வி கேட்டிருக்காரு. மினிஷ்டரும் தோ... விசாரிக்கச் சொல்றேன்னு சொல்லிக் கினு கம்முனு வுட்டுட்டாரு..."

"அப்பால...?"

"கேளு டமாஷை! அடுத்த எலக்ஷனே வந்திடுச்சி... எம்.எல்.ஏ. தினகரன் அந்த எலக்ஷன்லே தோத்துப் பூட்டாரு. அத்தால அவரு சட்டசபைக்குப் போவ முடியலை. கட்சி வேலையப் பாத்துக்கினு மூணு வருஷமா கம்முனு இருந்துக்கினாரு. அப்படி இருக்கச் சொல்லதான் இந்த வருஷம் கவுருமெண்டுலேர்ந்து கப்புனு ஒரு லட்டரு வந்திருக்கு."

"இன்னான்னு...?"

"90-வது வருஷத்துல கேட்டாரே ஒரு கேள்வி... அதுக்குப் பதில்தாம்பா இப்போ எழுதியிருக்காங்க...!"

"படா டமாஷ்தான்."

"அந்தக் காட்டும் டமாஷ் கீது... 'நான் கேட்ட கேள்விக்கு, எங்க காங்கிரஸ் கவுருமெண்டா இருந்ததாலத்தான் மூணு வருஷம் பிந்திக்கினாவது பதில் வந்திச்சு... கம்யூனிஸ்ட் கவுருமெண்டா இருந்திச்சினா இது கூட வராதுன்னாராம் தினகரன்."

"சர்தான் போ... ஆமா... நேத்து சாயந்தரம் கந்சாமி நம்ம வூட்டாண்ட வர்றேன்னான். வர்லபா. இன்னாவோ தெர்லை..."

"காலைல பாத்தம்பா. நேத்து கரண்ட் பில்லு கட்டிட்டு வரச் சொல்ல லேட்டாப் பூட்சாம். அதான் வர முடியலையாம். உங் கைல சொல்லச் சொன்னாம்பா..."

"நாமதான் கரண்ட் பில்லு கட்டணுமேன்னு லோல் படறோம். போன வாரம் டில்லிலேர்ந்து எம் மச்சான் வந்தான் தெரியுமா... அவன் இன்னா சொன்னான் தெரியுமா?"

"இன்னாவாம்?"

"டில்லில, ஆறாயிரம் ஜனங்க கீற குப்பத்துக்குத் திருட்டுத்தனமா கரண்ட் கனெக்ஷன் எட்திருக்காங்களாம். அத்தால அந்தச் சுத்தியிருக்கற எடங்கள்ல கப்பு கப்புனு கரண்ட் கட் ஆவறதப் பாத்து, அவங்க போலீஸ் கைல சொல்ல, போலீஸும் கரண்ட்காரங்களும் ஒண்ணாக் கூடிக்கினு குப்பத்துக்கு வந்து, திருட்டு கனெக்ஷனை நீக்கச் சொல்ல, குப்பத்து ஜனங்கள்லாம் அவுங்களைக் கல்லால அடிச்சு வெரட்டிட்டாங்களாம். அப்பால போலீஸ்காரங்க... இது இன்னாபா பேஜாருன்னு ஒதுங்கிக்கினாங்களாம். அத்தொட்டு கரண்ட்காரங்களும் கம்முனு பூட்டாங்களாம். வோட்டுப் போடற ஜனங்களாச்சேனு கட்சித் தலைவர்ங்களும் கண்டுக்கலையாம்!"

"அப்போ இன்னமும் திருட்டுக் கரெண்டுலதான் குஷாலாக்கீறாங்கன்னு சொல்லு!"

"ஆமாம்பா... அத்தோட, டில்லி ஜனங்களே படா கில்லாடிங்கதான்!"

"எப்படி சொல்ற?"

"பின்ன இன்னா... டில்லில ஓடற கவர்மெண்டு பஸ்ஸுங்களால சமாளிக்க முடியலேனு, பிரைவேட் கம்பெனி ஒண்ணைக் கூப்புட்டு, நீயும் பஸ்ஸுங்களை ஓட்டுன்னு சொல்ல... அவுங்களும் கலெக்ஷன் கெடச்சாப் போதும்னு படா ஸ்பீட்ல ஓட்டப் போவ, ஆக்ஸிடண்டு மேல ஆக்ஸிடண்டா நடந்துக்கினே இருந்துச்சாம். பாத்தாங்க டில்லி ஜனங்க... இதென்னடா பேஜாருன்னு, பிரைவேட் பஸ்ஸைப் பார்க்கச் சொல்லெல்லாம் கல்லெடுத்து அடிக்க ஆரம்பிச்சிட்டாங்களாம்! கடசீல போலீஸ்காரங்க வந்து ஒருவழியா தாஜா பண்ணினாங்களாம் போ...!"

– திருவனந்தபுரத்திலிருந்து எஸ். எஸ். மணி, தில்லியிலிருந்து ராஜீவி நரசிம்மன் அனுப்பிய செய்திகளின் அடிப்படையில்...



தியாக பூமி திரைப்படத்துக்கு
அரசு தடை விதிக்கப்படுவதாகத்
தெரிய வந்தது; கெய்ட்டி
தியேட்டரில் கூட்டம்
அலைமோத, சுற்றுச் சுவரே
தகர்ந்து விழுந்தது!
அமரர் கல்கி எழுதிய
தியாக பூமி
சரித்திரம் படைத்த சமூக நாவல்
கல்கி
செப்டம்பர் 5 இதழில் ஆரம்பம்!
உங்கள் கல்கி பிரதிக்கு உடனே உள்ளூர் ஏஜெண்டிடம் சொல்லி வையுங்கள்!

# மடிமீது தலை வைத்து

## சென்ற வாரத்தில் பரிமாறப்பட்டது :

பெசன்ட் நகரில் கடற்கரையோரத்தில் அமைந்த நவீன உணவு விடுதியான 'சபரி'யை நடத்தும் இளைஞன் கஸ்தூரிரங்கன், ஓர் இளம் மாலையை ஊதுபத்திக் கட்டு கொளுத்தி வாசம் பரப்பித் தொடங்குகிறான்.

அவனுடைய ஹோட்டலில் பணிபுரிபவர்கள் எல்லோரும் பன்னிரெண்டு, பதினொன்று வயதுப் பையன்கள், அதாவது பரிமாறுவதற்கு.

காஃபியைச் சிறந்த முறையில் தயாரிப்பதையே தன் வாழ்க்கை லட்சியமாகக் கொண்ட விசாலிப் பாட்டி, இட்லி வார்க்கும் காவேரிப்பாட்டி, முறுக்கு சுற்றும் கோமதிப்பாட்டி, ஜாங்கிரி பிழியும் காமுப் பாட்டி.

நிலையான கடற்கரை ஹோட்டலுடன், 'சபரி நடமாடும் உணவக'மாக ஒரு வேன். புறநகர்ப் பகுதிகளில் இட்லி, தோசை விற்பனை செய்ய நடமாடும் உணவகத்தை அனுப்பி விட்டு, ஹோட்டலின் உள்ளே வந்து ஒவ்வொரு வாடிக்கையாளராகக் கவனிக்கும் கஸ்தூரிரங்கன், ஒரு ஐ.ஏ.எஸ். அதிகாரியின் செல்லமகளைக் கையில் ஏந்தி அவசரமாக பாத்ரூமிற்கு அழைத்துச் செல்லும் வழியில் -

மோதுகிற மாதிரி அந்த இளம்பெண்.

கஸ்தூரிரங்கனையும், அவன் கையிலிருக்கும் பையனின் அடக்கமாட்டாச் செயலையும் பார்த்துத் திகைத்து வீலென்று கத்துகிறாள்.

---

கஸ்தூரிரங்கன், ஜிங்குலுவை, அருகில் கட்டியிருந்த டாய்லெட்டில் கொண்டு போய் நிற்க வைத்து விட்டு வெளியில் வந்தான்.

அந்தப் பெண் இன்னும் அவள் நின்ற இடத்தில் இருந்து நகராமல் இருந்தாள். அவள் கண்களில் கோபக் கச்சேரி களை கட்டியிருந்தது.

கஸ்தூரிரங்கன் அருகில் வந்ததும், ''உங்களுக்கெல்லாம் மேனர்ஸே கிடையாதா?'' என்று கேட்டான்.

''எனக்கு இருக்கு மேடம். ஆனா சின்னக் கொழந்தைக்கு வர்ற பாத்ருமுக்குத் தான் அதெல்லாம் இல்ல!''

''பேச்சில ஒண்ணும் கொறைச்சல் இல்ல''

''ஐ'ம் எக்ஸ்ட்ரீம்லி ஸாரி.''

''நான் கொஞ்சம் கவனிக்காம போயிருந்தா என் பொடவையெல்லாம் பாழாப் போயிருக்கும்.''

''நல்லவேளை. நீங்களும் கொஞ்சம் நகந்துட்டீங்க. பொடவை ஒண்ணும் ஆயிடலை. ஸாரி. ரொம்ப ஸாரி. இப்படி எதிர் பார்க்காம ஏதாவது நடந்துடும்.''

அவளுடைய கண்கள் மாறி விட்டன. முன்பிருந்த கோபம் காணாமல் போய் விட்டது. கண்களில் இப்போது கருணையா, சாந்தமா, கனிவா என்ன வகைப்படுத்துவது அந்த பாவத்தை என்று கஸ்தூரி ரங்கனால் இனம் பிரிக்க முடியாத ஒரு பாவம் தென் பட்டது.

''பரவாயில்லை'' என்றாள் மெல்லிய குரலில்.

''சாப்பிடத்தானே போறீங்க. வாங்க லேன். லேடீஸுக்குன்னு தனியா சிட்டிங் அரேன்ஜ்மெண்ட் இருக்கு.''

மறுபடியும் அவள் கண்களில் கோபம் தெர்மா மீட்டரில் பாதரசக் கோடு மேலேறுவது போல் தலைநீட்டிப் பார்ப்பதை அவனால் உணர முடிந்தது.

''அதை நான் பாத்துக்கறேன். மைண்ட் யுவர் ஓன் பிஸினஸ்! நீங்க என்ன இந்த ஹோட்டலில் ஷேர் ஹோல்டரா? கான் வாஸ் பண்றீங்களா?''

''மிஸ். நீங்கள் என்னவோ தப்பாகப் புரிந்து கொண்டு விட்டீர்கள். இந்த ஹோட்டல் நம்முடையதுதாங்க.''

''யூ மீன்?''

''சபரியை நடத்தறவனே நான்தான். ஐ'ம் கஸ்தூரிரங்கன்.''

''ரியல்லி?'' என்று அவள் ஆச்சரியமாகக் கேட்டாள்.

''யெஸ்!'' என்றான் அவன். இப்ப வரலாம் இல்லியா? வெல்கம் டு அவர் சபரி.''

கஸ்தூரிரங்கன் ஜிங்குலுவுடன் முன்னால் நடந்தான். அவள் கீழிருந்த மணலில் கால்கள் புதையப் புதைய அவன் பின்னால் நடந்தாள். ''மிஸ்டர் சபரி... நான் சாப்பிட வரல்லே.''

''எம் பேரு கஸ்தூரிரங்கன்.''

''மறந்துட்டேன்.''

''பரவாயில்ல. சாப்பிட வரல்லேன்னு சொல்லீங்க?''

2 சுபா

கஸ்தூரிரங்கன் அதற்குள் பெண்களுக்கென்று தனியாக ஒதுக்கி விட்டிருந்த இடத்திற்கு அவளை அழைத்து வந்திருந்தான். அவள் உட்காருவதற்காக ஒரு நாற்காலியைக் காட்டினான். அவள் உட்கார்ந்தாள்.

''ஆமா. எங்க காலேஜ்ல ஒரு சின்ன பார்ட்டி. போஸ்ட் கிராஜுவேஷன் முடிச்சிட்டுப் போறவங்களுக்கு நாங்க பார்ட்டி வக்கறோம். அதுக்கு நீங்க எங்க காலேஜுக்கு வந்து சப்ளை பண்ண முடியுமா? நீங்க சப்ளை பண்றதா பேப்பர்ல ஒரு விளம்பரம் பார்த்தேன். ஃப்ரண்ட்ஸ்லாம் கூட இங்க டிஃபனெல்லாம் நல்லா இருக்கும்னு சொன்னாங்க.''

''உங்க காலேஜுக்கு வந்து தாராளமா சப்ளை பண்றோம். இங்க டிஃபன் நல்லா இருக்கும்னு உங்க ஃப்ரண்ட்ஸ் சொன்னதையெல்லாம் நீங்க நம்ப வேண்டாம்.''

''அப்படின்னா...?'' என்று புரியாமல் ஒருமுறை கண்களை இமைத்துப் பார்த்தாள் அவள்.

''நீங்களே டேஸ்ட் பண்ணிப் பாருங்க. அப்புறம் ஒரு முடிவுக்கு வாங்க... இன்னிக்கு எங்க ஸ்பெஷல் - ஸ்வீட்ல ஜாங்கிரி, அப்புறம் ஸாவரில ஷுகர் காக்டெய்ல்.''

''காக்டெய்லா?'' என்று மிரண்டு போய்க் கேட்டாள் அவள்.

''காக்டெய்ல்னவுடனே ஒரு மாதிரி பாக்கறீங்களே மிஸ். ஜட்டம் பேருதான் காக்டெய்ல். சாப்ட்டுப் பாருங்க. டேய் ஜோதி.''

சற்றுத் தொலைவில் இன்னொரு மேஜையைக் கவனித்துக் கொண்டிருந்த சிறுவன் ஓடி வந்தான்.

''என்ன ரங்கா?''

''ஷுகர் காக்டெய்ல் ஒரு ப்ளேட்



கொண்டா.''

அந்தப் பையன் விழித்தான்.

''என்னடா?''

''இல்ல, ரங்கா...'' என்று தயங்கி விட்டு, அவன் கஸ்தூரிரங்கனின் காதருகில் வந்து அவனுக்குக் கேட்காத மாதிரி ரகசிய மாக ஏதோ சொன்னான். கஸ்தூரி ரங்கனின் முகத்தில் ஒரு சின்ன மாற்றம்.

''எக்ஸ்க்யூஸ் மீ மிஸ். இதோ வந்துட் டேன்'' என்று எழுந்து கொண்டான்.

ஜிங்குஜுவைப் பெற்றோரிடம் ஒப்ப டைத்துவிட்டு சமையல் கூடத்தை ஒட்டி இருந்த கதவைத் திறந்து அங்கிருந்த ஓர் அறைக்குள் நுழைந்தான் கஸ்தூரிரங்கன்.

அந்த அறை கொஞ்சம் விசாலமாக இருந்தது. ஒற்றைக் கட்டில். ஜன்னல். மேஜை. கட்டிலில் படுத்திருந்த ஒரு நடுத்தர

"என் தங்கைகளுக்கெல்லாம் கல்யா ணம் ஆனப்புறம்தான் என் கல்யாணம்னு எங்கப்பா அம்மாகிட்ட வீராப்பாப் பேசி னது தப்பாப் போச்சு!"

"ஏன்?"

"போன வாரம் எனக்கு இன்னொரு தங்கச்சி பிறந்திருக்கா!"

- கே. வி.



வயது ஆளின் பக்கத்தில் பாலுவும், கிருஷ் ணனும் முகத்தில் கவலையுடனும், நமுட்டுச் சிரிப்புடனும் நின்று கொண்டிருந் தார்கள்.

கஸ்தூரிரங்கனைப் பார்த்தவுடன், கிருஷ்ணன், படுத்திருந்தவனின் கன்னத் தில் தட்டினான். இடது கன்னம், வலது கன்னம் என்று மாறி மாறித் தட்டினான்.

''நடராஜா. எழுந்துக்கோ நடராஜா. லேட்டாய்டிச்சி. கஸ்டமர்ஸ் எல்லாம் வெயிட் பண்றாங்க. ரங்கா பார், ஒன்னைத் தேடி ஒன் ரூமுக்கே வந்துட்டாரு.''

''நடராஜன்னு சொல்லாதீங்கடா... நள ராஜன்னு சொல்லுங்கடா'' என்று படுத் திருந்தவன் குழறலாய் முனகினான். அவன் குடித்திருந்த ஏதோ ஒன்று தன்னுடைய மணத்தை அந்தக் காற்றோட்டமான அறை யில் நிறைத்திருந்தது.

''என்னடா, இவனுக்கு லிமிட் தாண் டிப் போயிடிச்சா?'' என்று கேட்டான் ரங்கா, குரலில் தொனித்த லேசான கவலையுடன்.

''நான் பாக்கல ரங்கா.''

''நடராஜா. என்னப்பா இது? நான் பாட் டுக்கு வெளில உக்காந்துக்கிட்டு 'ஷுகர் காக்டெய்ல் கொண்டு வா'ன்னு சொல் லிட்டேன். ஷுகர் காக்டெய்ல் எக்ஸ்பர்ட் நீ. இப்படி தண்ணியடிச்சிட்டுக் கெடக்கிறியே. கமான் கெட்-அப். மணி ஏழு. சீக்கிரம் நடராஜ். டேய். ஒரு பக்கெட்ல தண்ணி கொண்டு வாங்கடா.''

''ஐயையோ. தண்ணி ஊத்தாதே. ஊத்தாதே. அப்புறம் தெளிஞ்சிடும். இரு நான் எழுந்துக்கறேன். அதுக்கு முன்னால எம்பேரை கரெக்டா சொல்லு ரங்கா.''

''நளராஜா... எழுந்துக்க நளராஜா.''

''கஸ்டமர் வந்தாச்சா?''

''ஒரு ப்ளேட் ஷுகர் காக்டெய்ல்.''

''நீ போ. இதோ பின்னாலேயே அனுப்பி வைக்கிறேன்.''

''ஸ்பெஷல்.''

''ஜோரா பண்ணி அனுப்பறேன். நீ போ. டேய் பசங்களா. அந்த வாணலியை அடுப்புல ஏத்துங்கடா!''

''வாணலி அடுப்புலதான் இருக்கு. தண்ணி தள, புள.''

''அப்படியா. பின்ன என்ன ரங்கா. தண்ணி கொதிக்குதாமே. ஆய்டிச்சி. தோ அனுப்பிடறேன். போயேன். அட... என் னைப் பாக்காதே. போ.''

கஸ்தூரிரங்கன் சிரித்துக் கொண்டே அந்த அறையை விட்டு வெளியேறினான்.

நடராஜன், கஸ்தூரிரங்கன் படித்த அதே இன்ஸ்டிட்யூட்டில்தான் 'காடரிங் டெக்னாலஜி' படித்தான். கஸ்தூரி ரங்க னுக்கு ஆறு வருடம் சீனியர். காடரிங் டெக் னாலஜியைப் பயிலுவிக்கும் இடத்தில் பரி மாறுவது எப்படி, பழகுவது எப்படி, மேஜை மரியாதை எப்படி என்று என் னென்னவோ சொல்லித் தந்தாலும், நடராஜன் அந்தப் பயிற்சிப் பள்ளியில் இருந்த நாள் வரைக்கும் 'சமைப்பது எப்படி?' என்பதை மட்டும் மிகக் கூர்ந்து படித்தான் என்று சொல்லத் தோன்றுமளவு சமையலில் கைதேர்ந்தவன். காண்டி னன்டல், சைனீஸ், சவுத் இண்டியன், மொக லாய் என்று எல்லா வகைகளிலும் வெளுத் துக் கட்டுபவன். வாழ்க்கைதான் கொஞ்சம் கோணல் வகிடு கிராப்பாகி விட்டது.

அம்மா, அப்பா பார்த்துக் கட்டி வைத்த மனைவி அடங்காப்பிடாரி. கணவனை 'சமையல்காரா', 'சமையல்காரா' என்று கரித்துக் கொட்டி விட்டு, சமையல்காரன் அல்லாத வேறு எவனோ ஒருவனுடன் வாழ்க்கையைப் பிணைத்துக் கொண்டு விட்டாள். அந்தத் துக்கத்திலேயே அம்மா

வும், அப்பாவும் அடுத்தடுத்துப் போய் விட்டார்கள்.

சாராயம் குடித்து விட்டு பிளாட்ஃபாரத்தில் கிடந்த அந்த சமையல் கலைஞனை கஸ்தூரிரங்கன்தான் மீட்டுக் கொண்டு வந்தான். சபரியில் இணைத்துக் கொண்டான். 'நளராஜன்' என்று தன்னை அழைக்குமாறு நடராஜனே சொல்லிக் கொண்டாலும், அந்தப் பெயருக்கு அவன் தகுதியானவன் தான். புதுப்புது உணவு வகைகளை ஒரு தேர்ந்த சிற்பக் கலைஞன் போல, ஒரு சிறந்த ஓவியன் போல் உருவாக்கி, உலவ விடுவான். அவனுடைய இந்தப் புது முயற்சிகளை ருசி பார்ப்பதற்கென்றே சபரிக்கு நிறைய பேர் வருவார்கள். நடராஜன் இன்றைக்கு எவ்வளவோ மாறி விட்டான். மாறாதது ஒன்றே ஒன்று. குடிப் பழக்கம். அன்றைக்கு விலைகுறைந்தது. இன்றைக்கு விலை மிகுந்தது.

கவலையிலிருந்து விடுபடக் குடிக்கிறானாம். கவலையை மறக்க, தன் பிரச்னைகளிலிருந்து மீளக் குடிக்கிறானாம் -

பலர், கவலையை மறக்கவென்றும், பிரச்னையிலிருந்து விடுபடவென்றும், தகாத செயல்களில் ஈடுபட்டு மேலும் பிரச்னைகளை வளர்த்துக் கொள்கிறார்கள். தங்களையே பிரச்னைக்கு உரியவர்களாக்கிக் கொண்டு விடுகிறார்கள். பிரச்னைகளிலிருந்து விடுதலை பெற விரும்பினால், அவற்றோடு போராட வேண்டும். பிரச்னைக்கான காரணத்தை ஆராய்ந்து அலசி அதைக் களையப் பார்க்க வேண்டும். அதை விடுத்து, பிரச்னைகளிடமிருந்து சற்று விலகி நின்று, சைத்தானோடு சேர்ந்து கொஞ்ச நேரத்திற்குக் கும்மாளமிட்டால் பிரச்னை விலகி விடுமா என்ன?

இதை என்றைக்குத்தான் நடராஜன் புரிந்து கொள்ளப் போகிறானோ என்ற எண்ணத்துடன் வெளியே வந்த கஸ்தூரிரங்கன், பெண்கள் பகுதியில் தனியாகக் கொட்டு கொட்டென்று அமர்ந்திருந்த அந்தப் பெண்ணைப் பார்த்த பின்தான், அவள் நினைவு வரப் பெற்றவனாக அவளருகே விரைந்து சென்றான்.

''ஸாரி. உள்ளே கொஞ்சம் அவசர வேலை'' என்றான்.

''பரவால்லே. நான் வேடிக்கை பார்த்துக்கிட்டிருந்தேன். அதிலேயே என் பொழுது போய்டிச்சி. எங்கே ஷுகர் காக்டெய்ல்?''

''இதோ'' என்று அவளுக்கு முன்னால் மேஜை மீது தட்டை வைத்தான் கிருஷ்ணன்.

''சாப்பிடுங்க.''

''என்ன இது?''

''ஒண்ணுமில்லே. கோதுமையைத்தான் ஃப்ரைட் ரைஸ் மாதிரி பண்ணியிருக்கோம். கோதுமையை விட காய்கறிதான் அதிகமாத் தெரியும். எல்லாக் காய்கறிகளையும் போடறதாலத்தான் காக்டெய்ல்னு பேரு. ஒரு ஸ்பூன் சாப்பிட்டுப் பாருங்களேன். இது ஷுகர் பேஷண்டுகளுக்காகவே நாங்க தயாரிக்கறது. ஷுகர் பேஷண்டா இல்லாதவங்களும் சாப்பிடலாம்.''

அவள் ஒரு ஸ்பூன் அள்ளி வாயைச் சின்னதாகத் திறந்து போட்டுக் கொண்டாள்.

''ம்ம்ம். டெலீஷியஸ். ஆமா. ஷுகர் காக்டெய்ல்னு பேர் வச்சிருக்கீங்க. ஷுகர் பேஷண்ட்ஸ் இந்தப் பேரைக் கேட்டாலே சாப்பிட மாட்டாங்களே.''

''அதான் இல்லே. சக்கரை ஆசாமிங்களுக்கு, ஷுகர்னா ஒரு சபலம் இருந்துக்கிட்டே இருக்கும். பேரைக் கேட்டவுடனே ஆர்டர் பண்ணிடுவாங்க. சாப்பிட்டுப் பாத்



வந்தவர் : சாப்பாடு அஜீரணமா இருக்கு முதலாளி...!

ஹோட்டல் முதலாளி : அதுக்கு நான் என்ன பண்ண முடியும்?

வந்தவர் : இப்ப மசவாட்டிட்டுப் போயிடறேன்; நாளைக்கு வந்து சாப்பிட்டுக்கவா முதலாளி...?

- சீர்காழி வி. ரேவதி

துட்டு ஸ்வீட் இல்லேன்னாலும் திட்டாம சாப்பிட்டுட்டுப் போய்டுவாங்க. எப்படி? டேஸ்ட் பிடிச்சிருக்கா? பார்ட்டிக்கு ஆர்டர் தரீங்களா? புதுசா பஃபே டைப்ல பார்ட்டி ஏற்பாடு பண்றோம். நல்ல வரவேற்பு இருக்கு. பார்ட்டி நடக்கற எடத்துக்கே நாங்க ஸ்பிரிட் அடுப்பெல்லாம் கொண்டு வந்துடுவோம். சுடச்சுட பூரி, காலிஃபிளவர் ஃப்ரை எல்லாம் சர்வ் பண்ணுவோம்.''

''கவுண்ட் மீ இன்.''

''பெக் யுவர் பார்டன் மிஸ்.''

''பஃபே பார்ட்டியே வச்சிக்கலாம்னு சொல்வேன்.''

''உங்க பேர்ல புக் பண்ணலாம் இல்லையா?''

''எம் பேர் கீதா'' என்றாள் அவள்.

(தொடரும்)

“எனக்கு என்ன வயசு.... சொல்லுங்க பார்ப்போம்...''

''எழுபது... இல்லே எழுபத்தஞ்சு?''

''தப்பு... தொண்ணூத்து நாலு முடிஞ்சு இப்பத் தொண்ணூத்து அஞ்சு...'' - நடுங்காத கைலாகவத்தோடு சரசரவென்று மாம்பழத்தின் தோலைச் சீவிக் கொண்டே வெடிச் சிரிப்போடு பேசும் டாக்டருக்குப் பற்கள் இல்லை என்பது கூட ஒரு குறையாகத் தெரியவில்லை.

''நாப்பத்தஞ்சு வயசிலேயே பல்லெல்லாம் போயாச்சு... அப்புறம் நான் கட்டிக்கவும் இல்லே. ஆனா, பல்லு இல்லாமேயே எல்லாம் சாப்பிடப் பழகிக்கிட்டேன்'' என்றவர் தமது இளமையின் காரணத்தை விளக்குவது போல் தொடர்கிறார்.

''பதினஞ்சு வருசமாச்சு. உப்புங்கற பேச்சே கெடையாது. அப்படி உப்புச் சேக்கறதை நிறுத்தல்லேன்னாப் பத்து வருசம் முந்தியே கதை முடிஞ்சிருக்கும்!''

''எதுக்காக உப்பை நிறுத்தினீங்க?''

''நடந்தா மூச்சு வாங்கும். கால் வீக்கம் காணும். மருந்து சாப்பிட்டா வீக்கம் குறையும். மருந்தை நிறுத்தினா மறுபடி வீங்கும். உப்பை அடியோடு நிறுத்தினேன். எல்லாம் சரியாப் போச்சு. இருதயத்துக்கும், நீர் மாங்காய்க்கும் உப்பு ஆகவே ஆகாது.'' நீர் மாங்காய் என்று டாக்டர் குறிப்பிடுவது 'கிட்னி'யை.

இந்த 'எல்.எம்.பி' டாக்டர் படித்தது ராயபுரம் மருத்துவக் கல்லூரியில். சித்த வைத்தியம், ஹோமியோபதி, ஆயுர்வேதம் எல்லாவற்றிலும் இவருக்கு நல்ல அறிவு உண்டு. ஆனால் பின்பற்றுவது அலோபதி மட்டுமே. நூற்றுக்கணக்கில் ஓலைச் சுவடியிலிருந்து பெயர்த்தெழுதிய நகல்கள், விதம் விதமான ஆங்கில வைத்திய நூல்கள், 'அப்டுடேட்' அறிவுக்காக இன்றைய எம்.டி.யிடமிருந்தும் பாடப்புத்தகங்களை வாங்கிப் படித்துக் கொண்டே இருக்கிற ஆர்வம்.

எழுத்தச்சன் ராமாயணமா, பைபிளா, திருக்குர்-ஆனா... எ ல் லா வ ற் றி லு ம் இனிமை காணுகிற சமநோக்கு.

''இருபதாயிரத்துக்கும் மேலே பிரசவக் கேஸ் பார்த்தாச்சு. அறுபத்தி மூணு வருச அனுபவத்திலே, சிசேரியன் அவசியம்னு நான் சொன்னது பண்ணினது ஏழோ, எட்டோ... அவ்வளவுதான். இல்லே, நேசம்மா?'' என்று தம் உதவியாளரைப் பார்த்துக் கேட்கும் டாக்டர் தேவதாஸ் குரலில் பெருமிதம் அலைமோதுகிறது.

அபாரமாய் வளர்ந்து வருகிற மருத்துவ விஞ்ஞானத்தில், ஸ்கான், எக்ஸ்ரே என்று ஊடுருவிப் பார்க்கும் வாய்ப்புக்கள் - வசதிகள் அதிகமாகிவிட்டன. ஆனால் நோயாளியை டாக்டரே, நேரடியாகப் பரிசோதிக்கும் முறையில் நாம் மிகவும் பின்னடைந்து விட்டோம் என்பதில் பெரியவர் தேவதாஸுக்குச் சற்று வருத்தம்தான். ''மிகவும் பிரபலமான டாக்டர்கள், மருத்துவமனைகள் கையாண்டு வெற்றி பெற முடியாத பல கேஸ்கள் இவரிடம் வருகின்றன. அவர்கள் மிகவும் எளிய முறையில் இவரிடம் குணமடையவும் செய்கிறார்கள். ''புதிர் போல் இருந்தாலும் டாக்டர் தேவதாஸின் அனுபவச் செறிவு புரிந்து கொள்ளக் கூடியதாகவே இருக்கிறது'' என்கிறார் பேராவூரணியில் உள்ள இளைய தலைமுறை டாக்டர்களுள் ஒருவரான ஏ. கார்த்திகேயன், எம்.டி.

ஆங்கில மருத்துவத்தில் ஊசி போடுதல், வாய்வழியே மருந்து தருதல், மேல் பூச்சாக மருந்திடுதல் மூன்றும்தான் உண்டு. ஆனால் நம்முடைய இந்திய மருத்துவ முறைகளில் உள்ளே கிரகித்துக் கொண்டு குணமளிக்கும் எண்ணெய்ப் பூச்சும் சிறப்



* நோயாளியைப் பரிசோதிக்கிறார்...



* டாக்டர் தேவதாஸ்

# டாக்டர் தேவதாஸ்: 95நாட் அவுட்!

பாக விளங்குகிறது. ''நான்கு நாள் காய்ந்து போன தோலின் மீது கொஞ்சம் எண்ணெய் தடவித் தேய்த்துப் பாருங்கள். தேய்க்கத் தேய்க்க உடம்பு அதை உள் வாங்கும்'' என்கிறார் டாக்டர். மோட்டார் பைக் விபத்து ஒன்றில் நெஞ்சில் அடிபட்ட ஒருவருக்கு எண்ணெய்ப் பூச்சால் மட்டும் பதினைந்து நாட்களில் குணப்படுத்தியிருப்பது இவருடைய சாதனைகளுள் ஒன்று!

சமீப காலங்களில் அதிகமான கண் நோய்ப் பாதிப்புக்கள் உண்டாவதற்கு, ஊட்டச் சத்துக் குறைவு தவிர, விதம் விதமான சோப் வகைகள் பயன்படுத்துவதும் ஒரு காரணம் என்று அழுத்தமாகச் சொல்கிறார் டாக்டர்.

டாக்டர் தேவதாஸ் தினம் இருமுறை பசும்பால் சாப்பிடுவதில் தவறுவதில்லை. பகலில் நிறையக் காய்கறிகளோடு கூடிய மிதமான உணவு, இரவில் பழங்கள் என்று முறைப்படுத்திக் கொண்டிருக்கிறார்.

கவனம் பெற வேண்டிய இன்னும் சில விஷயங்களை டாக்டர் சொல்கிறார் :

''ஜீனியை விட, வெல்லம், கருப்பட்டி என்னும் பனை வெல்லம் இவை கூடுதல் சத்துக்கள் நிறைந்தவை. திறந்து வைத்திருக்கும் பண்டங்களை வாங்கி உண்ணக் கூடாது என்ற அடிப்படை சுகாதார உணர்வு கூட நமது மக்களுக்கு இன்னும் ஏற்படவில்லை என்பது நமது கல்வி முறையில் உள்ள கோளாறே. கடுகு எண்ணெய், தேங்காய் எண்ணெய் வெப்பமூட்டக்கூடியவை. நல்லெண்ணெய் உடலுக்குக் குளிர்ச்சி...''

**நா**ற்பத்தேழில் 'டிஸ்ட்ரிக்ட் போர்டு' நடத்திய கிராமப்புற மருத்துவ மனையில், பேராவூரணியில் வேலைக்கு வந்தார் டாக்டர் தேவதாஸ். சொந்த முயற்சியால் ஊர்ப் பிரமுகர்களின் உதவியோடு ஒன்றரை ஏக்கர் நிலம் வாங்கி, அந்தக் காலத்து ஏழாயிரம் ரூபாய் செலவில் மருத்துவமனைக்குக் கட்டடமும் கட்டினார். அதன் பிறகு அதை அரசுக்குக் கொடுத்துவிட்டு, 1956 இல் தொடங்கியதுதான் பேராவூரணி டாக்டர் தேவதாஸ் ஆஸ்பத்திரி. அன்றும் சரி, இன்றும் சரி, ஒரு பெயர்ப்பலகை கூடக் கிடையாது. ஆனால் வட்டாரத்தில் சின்னக் குழந்தை கூட... ''அதோ... அப்படியே ஆத்தோரமாப் போனீங்கன்னா... ஒரு பழைய கட்டடம்... வரும்'' என்று உற்சாகமாகக் காட்டுகிற அளவு தலைமுறை தலைமுறையாக இவர் புகழ் ஈட்டியவர்.

எட்டு அறைகள்... நோயாளிகள் வந்து தங்கி வைத்தியம் செய்து கொள்ள இடம் இலவசம்.

''லோக்கலைஸேஷன்'தான் அவருடைய சிறப்பு அணுகுமுறை. நோயுற்ற பகுதியைத் துல்லியமாக உணர்ந்து அறிந்து கொண்டு அதன் மேலேயே ஊசி மூலம் மருந்து செலுத்துவது. நவீன டாக்டர்களான நாங்கள் இப்படிச் செய்வதில்லை. இரத்தக் கசிவு ஏற்பட்டு விடக்கூடும் என்று எண்ணுவோம்.

குறிப்பாக ஒரு இளைஞனின் மண்ணீரலில் (ஸ்ப்ளீன்) வீக்கம் ஏற்பட்டது. கல்லீரல் கருங்கிப் போயிற்று. இதை பிரபல டாக்டர்களோ கருவிகளோ கண்டறியத் தவறிவிட்டார்கள். வெறும் தொட்டுணர்வாலேயே இன்ன இடத்தில் இன்ன கோளாறு என்று அறிய முடிகிற டாக்டர் தேவதாஸ் அங்கே டி.பி. தொற்றியிருக்கிறது என்பதைச் சீக்கிரமே கணித்துவிட்டு விலா எலும்புக்குக் கீழே நேரே ஈரலில் ஊசி மூலம் மருந்து செலுத்தினார். ஐந்து ஊசிகளில் அந்த ஆறுமாதக் கேஸ் பூரண குணமாகி விட்டது. பிரபல டாக்டர்களின் 'லிவர் பாழாகிவிட்டது' என்ற கண்டறிவு பொய்யாகி விட்டது!'' என்று சொல்பவர்கள் டாக்டர்கள் ஏ. கார்த்திகேயனும், ஏ. காந்தியும்.

''நாலஞ்சு வருசத்துக்கு முன்னே எனக்குத் தொண்ணூறு வயசாச்சுன்னு விழாக் கொண்டாடினாங்க. அப்பத்தான் ரொம்பப் பேருக்கு நான் கெழவன்னு தெரிஞ்சுச்சு போலே... அப்புறமாத்தான் இங்கே வர்ற ஆளுங்களும் கொறைஞ்சு போச்சு...'' என்கிற போது இலேசான கிண்டலும் தொனிக்கிறது.

அந்தக் காலத்தில் சுற்று வட்டாரத்தில் மருத்துவ வசதி என்பதே அரிதானது. பட்டுக்கோட்டை, அறந்தாங்கி, புதுக்கோட்டை என்று சுற்றுவட்டார நகரங்களுக்குத்தான் போக வேண்டும். அதை மாற்றிப் பேராவூரணியை வளப்படுத்தியவர் இவர். அதனாலேயே இவர் வசிக்கும் தெருவுக்கு இவர் பெயரையே வைத்துப் பெருமைப்படுத்தியிருக்கிறார்கள்.

– சுப்ர. பாலன்

படங்கள் : பாரதி ஸ்டுடியோ, பேராவூரணி



"நமது
ஜனாதிபதி
தலைமை
தாங்கிச் சென்ற
மேதின
ஊர்வலம்
ஆமர்
வீதியைக்
கடந்து கொண்
டிருந்த போது,
மனித வெடி
குண்டு ஒன்று
வெடித்திருக்
கிறது."

# தானத் தீ

அமரர் கல்கி

நினைவுச் சிறுகதைப்

போட்டி - 93

ரூ. 1,000

இரண்டாம் பரிசுக்

கதை

தேவகாந்தன்

வத்தளையிலுள்ள தமது சாராய ஸ்டோருக்கு தர்மபால அப்புஹாமி வந்தபோது, நேரம் சரியாக பத்து மணி. அவர் காரைவிட்டு இறங்கி வரவும் அவருக்காகக் காத்திருந்த உள்ளூர்ப் பிரமுகர்கள் சிலர் வணக்கம் தெரிவித்தபடி அவரை நெருங்கி வந்தனர்.

அப்புஹாமி அறிமுக பாவனை காட்டிச் சிரித்து, ''வாருங்கள்'' என்று வரவேற்றார்.

அந்தச் சிரிப்பு குரூரமானதா அல்லது அவரது இறுகிய முகத்துக்குச் சிரிப்பே குரூரமாகத் தோன்றியதா என்று பிரமிப்பாக இருந்தது. ஆனால், அந்தப் பிரமிப்பு வந்தவர்களுக்கு இருக்கவில்லை. அவரில் குரூரம் தவிர வேறு உணர்வு கண்டிராத மனிதர்கள் அவர்கள்.

அவர்கள் எதற்காக அங்கே வந்திருக்கிறார்களென்று அப்புஹாமிக்குத் தெரியும். அன்றைக்கு மே மாதம் தொடங்கியிருந்தது. விசாக பண்டிகையும், குடியரசு தின விழாவும் வருகின்றன. வத்தளைஹெந்தளைப் பகுதியில் அந்த சமய, தேசிய விழாக்கள் சிறப்பாக அண்மைக் காலத்தில் கொண்டாடப்பட்டு வருவதற்கு அவரின் பங்களிப்பே பிரதான காரணம். அந்த விழாக்கள் சம்பந்தமாக அவரைக் காண வந்திருந்த கூட்டம்தான் அது.

அவர்களோடு சேராத இன்னொரு கூட்டமும் அங்கே நின்றது. மூன்று எளிமைக் கோல வாலிபர்கள். பார்த்தால் பரிச்சயமானவர்கள் போலத்தான் இருந்தது அவருக்கு. ஆனால், கட்டி நினைவு கூர முடியவில்லை. மெல்ல, சில தினங்களுக்கு முன்னால் சிங்களஜன இலக்கிய மகாசபையைச் சேர்ந்தவர்களிடமிருந்து வந்த கடிதம் ஞாபகமாகியது. அவர்களாகவே இருக்க வேண்டுமென எண்ணிக் கொண்டார்.

அப்புஹாமி நேரே தமது அலுவலகத்துக்குச் சென்றார். ஏர் கண்டிஷனர் பொருத்தப்பட்ட அவரது அறை மட்டும்தான், அந்தப் பெரிய சாராய ஸ்டோர் வளாகத்திலேயே துப்புரவாக இருந்த இடம். ஆயினும், அங்கு கூட சிறிது சாராய வாடை இருக்கத்தான் செய்தது.

வந்தவர்கள் உள்ளே போய்த் தங்கள் தங்கள் விஷயங்களைப் பேசி முடித்துக் கொண்டு திரும்பிய பின்னால், இலக்கிய மகா சபைக்காரர் உள்ளே சென்றனர்.

அமரச் சொன்னார் அப்புஹாமி. ஆயிரம் ரூபாய்க்கு செக் எழுதி அவர்களிடம் கொடுத்தார்.

மகாசபைக்காரர் நன்றி கூறிக் கொண்டு சென்றதும் எந்தக் காரியத்திலும் மனம் லயிக்காது சிறிது நேரம் அப்படியே அமர்ந்திருந்தார். அவருடைய மனம் மிகவும் சந்தோஷமாக இருந்தது.

இதுவரை காலமும் அவரிடம் நன்கொடை என்று வந்தவர்களெல்லாம் நாம் சிங்களவர் இயக்கம், துட்ட கைமுனு முன்னணி போன்ற அமைப்புகளைச் சேர்ந்தவர்களாகவே இருந்தனர். அவரும் தாராளமாகவே அவர்களுக்கு உதவி செய்து வந்தார்.




அந்த சாராய வியாபாரத்தைக் கொண்டு நடத்துவதற்கு, அந்த மாதிரியெல்லாம் செய்ய வேண்டிய அவசியம் இருந்தது.

இரண்டு மாதங்களுக்கு முன்னால் ஜனாதிபதியின் 'ஒரு குடும்பத்துக்கு ஒரு வீடு திட்ட'த்திற்கு ஒரு லட்ச ரூபாய் நன்கொடை அளித்த போது கூட, அப்புஹாமி இவ்வளவு மனநிறைவை அடையவில்லை. அந்த ஜன இலக்கிய மகாசபையாருக்கு ஆயிரம் ரூபாய் கொடுத்தது பெரிய மனத்திருப்தியை அளித்தது அவருக்கு.

திடீரென அவரது நினைவு வலையத்தைக் கலைத்துக் கொண்டு டெலிபோன் அடித்தது. எடுத்தார்.

"ஹலோ! யார் டி.ஏ.வா? நான் வீரசேகரா பேசுகிறேன்."

"சொல்லுங்கள், என்ன விசேஷம்? ஏன், குரல் சிறிது பதற்றமாய் இருப்பதுபோல் தெரிகிறதே!" என்றார் அப்புஹாமி.

"பதற்றம்தான். பெரிய பயங்கரம் நடந்துவிட்டது, டி.ஏ."

"பயங்கரமா?"

"ஆமாம். சிறிது நேரத்துக்கு முன்பு, நமது ஜனாதிபதி தலைமை தாங்கிச் சென்ற மேதின ஊர்வலம் ஆமர் வீதியைக் கடந்து கொண்டிருந்த போது, மனித வெடிகுண்டு ஒன்று வெடித்திருக்கிறது."

"என்ன சொல்கிறீர்கள், வீரசேகரா? மனித வெடி குண்டு....?"

"ஆம், டி.ஏ! மனித வெடிகுண்டுதான். ஊர்வலத்தில் சென்ற பொதுமக்கள், கட்சித் தலைவர்கள் பலர் மாண்டு போனார்கள். வீதி முழுதும் ஒரே அல்லோல கல்லோலமாக இருக்கிறது. இந்த விபத்தில் நமது ஜனாதிபதி கூட...."

"ஓ..... புத்த பகவானே!"

"இப்பொழுதுதான் நம்பகமான இடத்திலிருந்து தகவல் வந்தது. ஆயினும், உண்மை எதுவும் இன்னும் வெளியிடப்படவில்லை. செய்திக் கதவடைப்பு."

"இப்படி எல்லா அரசியல் தலைவர்களையும் பறிகொடுத்துவிட்டு இந்த நாடு என்ன செய்யப் போகிறது?" அப்புஹாமி பிரலாபித்தார்.

"கரையோரச் சிங்களவர், கண்டிச் சிங்களவர் என்ற பேதமின்றி சகல சிங்கள மக்களும் விழித்துக் கொள்ளாத வரை இதற்கு விடிவே இருக்கப் போவதில்லை, டி.ஏ! நாங்கள் ஏதாவது செய்தே ஆகவேண்டும். எதற்கும் செய்தி வெளியான பிறகு மறுபடி டெலிபோன் செய்கிறேன்."

வார்த்தைகளின் முடிவில் 'க்ளிக்!' சத்தம் கேட்ட பின்னரும் ரிஸீவரை கீழே வைக்கவும் நினைவற்றவராய் அமர்ந்திருந்தார் அப்புஹாமி.

ஜனாதிபதி கொலை செய்யப்பட்டு விட்டார் என்பது அதிர்ச்சிதான். ஆனால், வீரசேகராவின் கடைசி வார்த்தைகளால் மேலும் பல்வேறு அதிர்ச்சிகளுக்கு ஆளாகிப் போயிருந்தார் அவர்.

'எதற்கும் செய்தி வெளியான பிறகு மறுபடி டெலிபோன் செய்கிறேன்.'

இந்த வார்த்தைகளை இதற்கு முன்னரும் எப்போதா இவர் கேட்டிருக்கிறாரா? ஆம், 1983 ஜூலையிலும் இதே வார்த்தைகளைக் கேட்டிருக்கிறார். சொன்னவரும் இதே வீரசேகராதான்.

சொன்ன மனிதரையும், சொல்லப்பட்ட சந்தர்ப்பத்தையும் நினைவு கொண்டதும் உள்ளங்கால் கூட வியர்க்க ஆரம்பித்தது அப்புஹாமிக்கு. வீரசேகரா சொன்ன வார்த்தைகளின் உள்ளர்த்தம் அவருக்கு மட்டும்தான் தெரியும்.

பத்தாண்டுகளுக்கு முன்பு அந்த வார்த்தைகள் சொல்லப்பட்ட போது, மறுபடி வீரசேகராவின் டெலிபோன் எப்போது வருமென 'சிங்கள இன விழிப்புணர்'வோடு அவரும் காத்திருந்தார். பின்னர் அந்த அழைப்பு வந்ததும் வீரசேகராவுக்கு எண்ணெய், சாராயம், அடியாட்களென்று தாராளமாக வழங்கி, தன் பங்களிப்பைக் கச்சிதமாக நிறைவேற்றினார். அந்த இனக் கலவர காலத்தில் ஆயிரக் கணக்கான உயிர்கள் மடிந்ததற்கு அப்புஹாமியும் ஒரு காரணஸ்தர்.

இப்போது பத்தாண்டுகளுக்குப் பிறகும் அதே மாதிரியான ஒரு தொலைபேசி. அதுவும் அதே மனிதரிடத்திலிருந்து. முந்தியதை விட பன்மடங்கு அதிர்ச்சியை ஏற்படுத்தக்கூடிய பாரதூரமான ஒரு செய்தி சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்ரீலங்காவின் அந்தப் பேரிழப்பை அப்புஹாமி எவ்வாறு எதிர்கொள்ளப் போகிறார்? கட்சி அபிமானி என்ற தளத்திலிருந்தா? அல்லது, மனித அபிமானி என்ற நிலைப்பாட்டிலிருந்தா?

இன்றுவரை அவரது அரசியல் தளம் மாறவில்லைதான்.

ஆனால், பார்வை மாறியிருந்தது. தம்மின் கொடூரங்களை மெல்ல மெல்லத் தாமே உணர்ந்ததன் விளைவு அது. அது மட்டுமல்ல; சமீபகாலமாக அவருள் வலுப்பட்டு வந்த அந்த புதிய பார்வையினை, அவரின் புதிய தொடர்புகள் தீக்ஷண்யப்படுத்தியுமிருந்தன. இந்த நிலையில், அந்த இழப்பென்ன, வேறு எந்த இழப்பு காரணமாகவும்தான் தம் நிலைப்பாட்டிலிருந்து அவர் நிலை தளும்பிவிடக் கூடாது.

ஜுலை 83 பங்களிப்பு போல எந்த விதமான பங்களிப்பையும் தாம் இந்த முறை செய்யப் போவதில்லையென மனத்தை உறுதி செய்து கொண்டார் அப்புஹாமி.

ட்ர்ர்....! ட்ர்ர்....!

மறுபடி டெலிபோன் ஒலித்தது.

அவர் எடுக்கவில்லை. வீரசேகராவாக இருந்து விடுமோ என்ற பயம். வீரசேகரா மட்டுமா? அப்புஹாமியின் உதவியது முக்கியத்துவம் தெரிந்த இன்னும் எத்தனையோ பேர் போன் செய்யலாம். எவரின் அழைப்பையும் அவர் எதிர்கொள்ளக்கூடாது. அந்தச் சூழ்நிலையிலிருந்தே தப்பி ஓடிவிட வேண்டும்.

டெலிபோன் தொடர்ந்து ஒலித்துக் கொண்டிருந்தது. அவர் மெதுவாக ரிஸீவரை எடுத்தார்.

''ஹலோ! டி.ஏ.வா?''

''ஆமாம். யார் பேசுகிறது?''

''நான் ஞானச்சந்திரன் பேசுகிறேன். ஆமர்வீதியில் நடந்ததெல்லாம் கேள்விப்பட்டிருப்பீர்கள்.....''

''ஆம், வீரசேகரா இப்போதுதான் போன் செய்து சொன்னார்.''

''நான் ஊர்வலத்திலேயே நின்றிருந்தேன், டி.ஏ! அதுவும் ஜனாதிபதிக்கு ஏழு எட்டு மீட்டர் தூரத்தில்! மின்வல் வெட்டிய நேரத்தில் எல்லாம் நடந்து முடிந்துவிட்டது. ஆனால், ஜனாதிபதியின் கொலைபற்றி இன்னும் ரேடியோவிலோ, தொலைக் காட்சியிலோ அறிவிக்கப்படவில்லை. இப்பொழுதே கொழும்பு ஒரே டென்ஷனாக இருக்கிறது. செய்தி வெளிவந்தால்....? ஏன் டி.ஏ., கலவரம் ஏதாவது தொடங்குமென்று நினைக்கிறீர்களா? சொல்லுங்கள், டி.ஏ! என் மனைவி, பிள்ளைகளோடு நான் எங்காவது ஓடிவிடுகிறேன்.''

கேட்பவர் ஒரு தமிழர். அயலவர். அறிஞரும் நண்பர். என்ன சொல்வார் டி.ஏ.?

'டி.ஏ., நம்மை நம்பி - சிங்களவர்களை நம்பி - ஒன்றரை லட்சம் யாழ்ப்பாணத்துத் தமிழர்கள் கொழும்பிலே வந்து வசிக்கிறார்கள். நமது சொத்து, நமது அந்தஸ்து, நமது அரசியல் செல்வாக்கு என்று எது அழிந்தாலும், அந்த மக்களின் நம்பிக்கையைக் காப்பாற்ற வேண்டியது நமது கடமையல்லவா?'

ஆறு மாதங்களுக்கு முன்னால், காலிமுகத் திடலில் கடற் படை உப-தளபதி ஒருவர் கொலை செய்யப்பட்ட போது, இதே ஜனாதிபதி சொன்ன வார்த்தைகள்தான் இவை. ஜனாதிபதியே நேரில் நின்று சொன்னது போல் காதில் ஒலித்தது அப்புஹாமிக்கு.

சில கணங்கள் மௌனமாயிருந்த அவர் திடசித்தத்தோடு சொன்னார். ''நிலைமையைப் பார்த்தால் எதுவும் நடக்கலாம் போலத்தான் தெரிகிறது. ஆனாலும், நீங்கள் ஒன்றுக்கும் பயப்பட வேண்டாம், ஞானா. பிரச்னை ஏதாவது தோன்றினால், எனது வீட்டில் வைத்தாவது உங்களைக் காப்பாற்றுவேன்.''

''மிகவும் நன்றி, டி.ஏ.!''

அவர் ரிஸீவரை வைத்தார்.

ஞானச்சந்திரனின் ஒற்றைக் குரலில் ஒன்றரை லட்சம் பேரின் அவலக் குரலை கற்பிதம் பண்ணினார் அவர். பிராண பயம் கொண்ட அந்த மனிதர்களின் முகங்கள் மனக்கண்ணில் நிழலாடின. அவரது உள்ளம் துடித்தது.

யோசித்த போது, ஓடிவிடுவது கூட சரியான பரிகாரமல்ல என்பது அவருக்குத் தெரிந்தது. ஒருவேளை பிரச்னையில் பங்கு பெறாமல் அவர் தப்பித்துக் கொள்வது அதனால் சாத்தியமாகலாம். ஆனால், பிரச்னையையே தவிர்த்துவிட முடியாது. அவருக்கு அந்த ஒன்றரை லட்சம் மக்களும் காப்பாற்றப்பட்டாக வேண்டும்.

அந்த நிமிஷம்வரை ஜனாதிபதியின் கொலைச் செய்தி அதிகாரபூர்வமாக அறிவிக்கப்படவில்லை. எனினும், இன்னும் சிறிது நேரத்தில் அது அறிவிக்கப் படத்தான் போகிறது. அதைக் கேட்கும் பாமர மக்களும் காடையர்களும் வெவ்வேறு நோக்கங்களோடு கொதித்தெழப்

''எம் பையனுக்கு சுத்தமா தமிழே வர மாட்டேங்குது...''

''எப்படி சொல்றீங்க...?''

''யானையைப் பார்த்து 'Rat' Phant ன்னு இங்கிலீஷ்ல சொல்றான்...!''

- வா. சுகன் ப்ரியன்.



போகிறார்கள். அரசியல் கட்சி அவர்களுக்கு அதிகாரபூர்வமற்ற முறையில், வீரசேகரா போன்ற ரவுடித் தலைவர்கள் மூலம் தலைமை தாங்கி இவசங்காரம் நடத்தும். அந்த சாராயக் கிடங்கை மூடிவிட்டு ஓடிவிடுவதால் மட்டும் என்ன ஆகிவிடப் போகிறது? அவரிடம் எதிர்பார்க்கும் உதவியை அது தானாகவே எடுத்துக் கொள்ளும். அப்படி எடுத்துக் கொள்ளப்படக் கூடிய வசதியான இடத்தில், நகரத்தின் ஒதுக்குப்புறமாய்த்தான் அவரது சாராயக் குதம் அமைந்திருந்தது.

உணர்ச்சி வெறி கொள்ளும் ஜனக் கூட்டம், தம் இதயத்தை இரும்பாக்க முதலில் சாராயத்தைத்தான் தேடும். தமக்கு எதிரியான, உதவி செய்ய மறுத்தவர்களின் சாராய தவறணைகளை, குதங்களை உடைக்கும். பல சந்தர்ப்பங்களில் இதை தன் அனுபவ உண்மையாய்த் தெரிந்தவர் அப்புஹாமி.

அதைத்தான் அவர் தடுத்தாக வேண்டும்.

ஆனால், எப்படி?

அவருக்குத் தெரியவில்லை.

திடீரென்று அப்போதுதான் தாம் சுருட்டுப் பிடித்துக் கொண்டிருப்பது அவருக்கு பிரக்ஞையாகியது. எப்போது சுருட்டு எடுத்தார்? எப்போது பற்றவைத்தார்? - அவருக்குத் தெரியாது.

வளாகத்துள் யாரும் புகை பிடிக்கக் கூடாது என்பது அவரிட்ட உத்தரவுதான். ஆயினும், அதை அன்றைக்கு அவரே மீறியிருக்கிறார். தம் நண்பர் ஒருவரின் சாராய ஸ்டோர் தீப்பிடித்து, ஒரு மணி நேரத்தில் சொத்து முழுவதுமே தீய்ந்துபோன சம்பவத்தைக் கேட்ட பின், அந்த உத்தரவை அங்கே போட்டிருந்தார் அப்புஹாமி.

சட்டென அவர் மனத்தில் பொறி.

ஏன், அப்படிச் செய்து விட்டாலென்ன?

கொழும்பு மாநகரத்தில் ஒன்று மட்டுமா, அதுபோல எத்தனையோ சாராயக் குதங்கள் இருக்கின்றன. அப்படியிருக்க, அந்தத் திட்டத்தின் மூலம் கலவரத்தைத் தடுத்து விடுதல் எங்ஙனம் சாத்தியம்? - அவருக்குள் மீண்டும் கேள்விகள்.

அவரைப் போல இன்னும் சிலர், அல்லது பலர் அவ்வாறு நினைத்து விட்டால், அதுவே ஒரு முழுமையான கலவரத் தடுப்புக்கு வழிவகுக்கக் கூடுமல்லவா? - அவருக்குள் மீண்டும் நம்பிக்கை.

அதன் விலையை ஒரு கணம் எண்ணிப் பார்த்தார் அப்புஹாமி.

அவரது உடம்பே ஆடியது.

சரக்கு, தளபாடம், வாகனம், கட்டடங்கள் உட்பட ஒரு கோடி ரூபா பெறுமதியான சொத்து!

அந்தச் சேதம் பொருளாதார ரீதியாக அவரை முடமாக்கிவிடும். அத்துடன், அரசியல் செல்வாக்கு, சமுதாய அந்தஸ்து யாவற்றையுமே அவர் இழந்துவிடுவார்.

1883 - ல் பௌத்த சிங்களவரின் கிறித்தவர்களுக்கெதிரான ஆர்த்தெழுதல் நாளிலிருந்து, சுமார் நூற்றுப் பத்து வருடங்களாக நான்கு தலைமுறைகளில் கட்டி வளர்க்கப்பட்ட ஒரு வர்த்தக சாம்ராஜ்யம், ஒரு நாளில் - ஒரு மணி நேரத்தில் - அவரால் தூள் தூளாக்கப்படப் போகிறது.

ஆனால், அப்புஹாமிக்கு வேறுவழி தெரியவில்லை. சரக்குகளை அப்புறப்படுத்த கால அவகாசம் போதாது. எந்த நிமிடத்திலும் முதல் பலிக்குரலையும், முதல் நெருப்பின் புகைச் சுருளையும் அவசரமாய் இச்சிக்கும் ஆவேசக் குரல்கள் சாராயக் குத வாசலில் ஒலிக்கும்படிக்கு ஜனாதிபதியின் கொலைச் செய்தி பகிரங்கப்படுத்தப்படலாம். அவருக்கு வேறு வழி இல்லைதான்.

டெலிபோன் அடித்தது.

அவர் எடுக்கவில்லை.

சிறிது நேரத்தில் அது தானாக அடங்கியது.

அவரின் பரபரப்பு இன்னும் அதிகரித்தது.

அவர் இறுதி முடிவுக்கு வந்துவிட்டவர் போல, குப்பைக் கூடையில் சுருட்டை வீசிவிட்டு, சிறிசேனவை அழைத்தார்.

சிறிசேன வந்ததும், ''வேலையாட்களெல்லாம் எங்கே?'' என்று கேட்டார்.

''சாப்பிடப் போயிருக்கிறார்கள், முதலாளி.''

''லாரி, வேன், டிரைவர்கள்....?''

''அவர்களும்தான். செக்யூரிட்டி மட்

'குடும்பநல'க் கதைகளில் டாக்டரேட் வாங்க ரெடியாக இருக்கும் சேகருக்கு வந்தது விபரீத ஆசை. கரம் மசாலாக் காதல்!

கொஞ்சமும் மாறாத ஃபார்முலாக் காதலர்களாக சரவணனும் ஸ்ரீ பார்வதியும். சீன்டல்களில் சரித்திரம் படைக்கும் அம்மணிக்கு ஜே! வாத்தியார் சேரில் முன் சொருகி வரவேற்கும் வழக்கமான குறும்பு நாயகியாக அறிமுகமானாலும் அந்தக் கிளைமாக்ஸ் தவிப்பு படு இயற்கை.

விஜயகுமார் இன்னும் எத்தனை படங்களில் 'அந்தஸ்து' பேசப் போகிறார்? அதற்கொரு 'கடமஸ்து' சொன்னால் தேவலை.

ஜனகராஜ் - ஸ்ரீவித்யா ஜோடி ஒர்க் அவுட் ஆகியிருக்கிறது. ஜயர் பாஷையில் ஸ்ரீவித்யாவும் வழக்கமான பிடிவி எஞ்சின் உதறல் குரலில் ஜனகராஜும் படம் முழுக்க ஜொலிக்கிறார்கள்.

ஹீரோ சரவணனை ரொம்ப நல்லவராக முதலில் காட்டி விட்டு, பின் அரைடிக்கெட்டுகளுடன் சேர்ந்து 'பாம்' வைக்க முயற்சி செய்வதாகக் காட்டுவது, மறுபடி நல்லவனாக பிளேட்டை மாற்றுவதெல்லாம்... ஸாரி, தீர

## பார்வதி என்னைப் பாரடி

ளிக்க முடியலே! தவிரவும் 'பாம்' என்ன பெட்டிக் கடை சமாச்சாரமா? அதுவும் அப்படி ஒரு பட்டிக் காட்டில்?

கடைசியாக ஒன்று. ஊர் முழுக்கப் பார்த்துக் கொண்டிருக்க, ஒன்னே காலணா காதலுக்காக ஒருவன் நடு ரோடில் நீக்குளிக்கிறானென்றால் - ஐயா! ஆரம்பத்தில் வேண்டாம்; கபம் போடுகிற நேரத்தில் கூடவா போலீஸ் வராது?

காதில் பூவையல்ல; பூங்காவனத்தையே சுற்றியிருக்கிறார்கள்.

இளையராஜா மட்டும் இல்லாவிட்டால் படத்தின் ஒரே ஆடியன்ஸ் சேகராகத்தான் இருப்பார்!

- ஆர்.பி.ஆர்.



டும் கேட்டில் நிற்கிறான். மற்றது, நமது வாட்ச்மேன் சில்வா.''

''நல்லது. சிறிசேன, நீண்ட காலமாக என்னிடத்தில் வேலை செய்கிற விசுவாசமான ஊழியன் நீ. ஏன், எதற்கு என்று கேட்காமல் இப்போது நான் சொல்லப் போவதை வார்த்தை பிசகாமல் செய்வாயென்று நம்புகிறேன்'' என்றார் அப்புஹாமி.

''செய்கிறேன், முதலாளி'' என்றான் சிறிசேன.

அவர் என்றைக்குமில்லாத நிதானத்தோடு தம்முடைய திட்டத்தை எடுத்துக் கூறினார்.

அது கேட்டு அதிர்ந்து போனான் சிறிசேன. ''இது என்ன கொடுமை, முதலாளி? நீங்கள் ஏதோ குழப்பத்தில்.....''

''இல்லை, சிறிசேன. இப்பொழுதுதான் நான் நிதானமாகவே இருக்கிறேன். நமது ஜனாதிபதி கொலை செய்யப்பட்டு விட்டார், தெரியுமா உனக்கு?''

''மகே அம்மே.....!''

''ஆம், சிறிசேன. பத்தரை மணியளவில் இந்தச் சம்பவம் நடந்திருக்கிறது. நிலைமை உனக்குப் புரிகிறதா, சிறிசேன? அதனால்தான் இந்த முடிவை நான் எடுக்க நேரிட்டது. இன்னொருமுறை இனப் பிரச்னை தோன்றுவதை ஜனாதிபதியே விரும்பியிருக்கவில்லை. அப்படியிருக்க, அவரின் கொலை காரணமாகவென்றாலும், ஒரு அசம்பாவிதம் நடக்கக் கூடாது. அதைத் தடுக்க வேண்டிய கடமை எனக்கு, உனக்கு, நம் எல்லோருக்குமே இருக்கிறது.''

''ஆனாலும், இது.....''

''எனக்கு வேறு வழி இல்லை, சிறிசேன. சரி, நேரம் போகிறது. சொன்னது போல எல்லாவற்றையும் செய். கடைசி நேரத்தில் என்னைக் கைவிட்டு விடாதே சிறிசேன.''

சிறிசேனவின் கண்கள் பட்டெனக் கலங்கின. முதலாளியே ஊழியன் போல் என்ன ஒரு கெஞ்சுதல்! அதுவும் டி.ஏ.விடத்திலிருந்து! அதுவும் சக மனிதர்களைக் காப்பதற்காக!

சிறிசேன அலுவலகத்தை விட்டு வெளியேறிய சிறிது நேரத்தில், அவசரமாய்க் காரில் ஏறிக் கொண்டு கிளம்பினார்.

அப்பொழுது நேரம் 12:40. அவர் கார் ரேடியோவைத் திருப்பினார். ஜனாதிபதியின் கொலை பற்றிய விசேஷ செய்தி ஒலி பரப்பாகிக் கொண்டிருந்தது. 'இலங்கையின் மாண்புமிகு ஜனாதிபதி திரு. ரணதுங்க பிரேமதாச அவர்கள், இன்று காலை பத்தரை மணியளவில்.....'

ஓரமாக காரை நிறுத்திவிட்டு அப்புஹாமி திரும்பிப் பார்த்தார். தூரத்தே பயங்கர வெடிச் சத்தங்களுடன் சாராயக் கிடங்கு தீப்பிடித்து எரிந்து கொண்டிருந்தது.

கணீர் கணீரென பாட்டில்கள் சிதறின.

கூரை ஓடுகள், அஸ்பெஸ்தோஸ் சீட்கள் வெடித்துப் பறந்தன.

கரும்புகை சுருண்டு சுழன்று மேலே பரவியது.

அப்புஹாமி மூட்டியதுதான். ஆயினும், இனக் கலவரத் தீ அல்ல. அது ஒரு வகையில்.... ஞானத் தீ!

அவரது முகத்தில் சிரிப்பு.

அது வழக்கம் போல் குரூரம் நிறைந்ததாய் அப்போது தோன்றவில்லை.

# இன்று கடன்;



“இந்தியாவுக்கு உதவும் சங்கம்” (AID INDIA CONSORTIUM) என்பதாக ஒன்று இருக்கிறது. இக்குழு, கடந்த ஜூலை 2-ம் தேதி பாரிஸில் கூடி இந்தியாவுக்கு 740 கோடி அமெரிக்க டாலர்கள் உதவி செய்வது என்று தீர்மானித்துள்ளது. அதாவது ரூ 23,000 கோடி கடன் தருவதாக அர்த்தம்.

மேற்படி சங்கத்தில் உலக வங்கி, சர்வதேச நிதி நிறுவனம், ஆசிய அபிவிருத்தி வங்கி போன்றவை தவிர, அமெரிக்கா, பிரிட்டன், ஜப்பான், பிரான்ஸ், இதாலி, ஜெர்மனி போன்ற நாடுகளும் அங்கம் வகிக்கின்றன. கடன் தருவதாக இச் சங்கம் ஒப்புக் கொண்டதற்கு நாம் நன்றி தெரிவிக்கக் கடமைப்பட்டிருக்கிறோம்.

என்றாலும், கடன் கிடைத்து விட்டது என்பதற்காகவே அகமகிழ்ந்து ஆனந்தக் கூத்தாடும் நமது அரசாங்கம் போல் நாமும் நடந்து கொள்ள வேண்டியதில்லை. சிந்திப்பது நலம். சென்ற ஆண்டை விட 200 மில்லியன் டாலர் கூடுதலாகக் கடன் தர சங்கம் ஒப்புக் கொண்டு விட்டது என்பதால் மத்திய அரசு பரவசப் பட்டுக் கொண்டிருக்கிறது. இதை ஒரு பெரிய சாதனை என்றும் பறைசாற்றுகிறது!

மேலெழுந்தவாரியாகப் பார்க்கும் போது நமது அன்னியக் கடன் தவணைகளைத் திருப்பித் தரவும் உடனடியான அபிவிருத்திப் பணிகளைக் கவனிக்கவும் இந்தத் தொகை பயன்படும் என்பதில் மகிழ்ச்சி ஏற்படவே செய்யும். ஆனால் 'இந்தக் கடன்களை வட்டியுடன் சேர்த்து எப்படி திருப்பித் தரப் போகிறோம்? அதற்கு அரசு என்ன திட்டம் வைத்திருக்கிறது?' என்று பார்த்தால் உதட்டைப் பிதுக்க வேண்டியதாக உள்ளது. இன்று நமது இறக்குமதி ஆண்டு தோறும் 50,000 கோடி. ஏற்றுமதி 40,000 முதல் 42,000 கோடி வரை. ஆக, ஆண்டொன்றுக்கு இதிலேயே 8000 கோடி ரூபாய் துண்டு விழுகிறது. இதைச் சமாளிக்கவே பெருமுயற்சி எடுத்து ஏற்றுமதியை அதிகரிக்க வேண்டியிருக்கிறது. இந்தச் சூழலில் மேலும் மேலும் அன்னியக் கடன், அதற்கு வட்டி என்றால் நிலைமை மேலும் சிக்கலாகும்.

இப்போது கொடுக்கப்பட இருக்கும் ரூ 23,000 கோடியையும் சேர்த்து நமது மொத்த அன்னியக் கடன் 2,33,000 கோடி! உள்நாட்டுக் கடனையும் சேர்த்தால் 4 லட்சம் கோடி! அரசாங்கத்தின் இந்தக் கடன் சுமையை நமது எதிர்காலச் சந்ததியினர்தான் தாங்க வேண்டும். பிள்ளை தலையில் கடன் சுமையை ஏற்றி விடுகிற தகப்பன் நிலையில் நாம் இருக்கிறோம். நம்மை எதிர்காலச் சந்ததியினர் மதிப்பார்களா?

உற்பத்தியை அதிகரிக்கக் கடன் பெறுவது தொழில் துறையில் காணக்கூடியதே. ஆனால் கடந்த பல ஆண்டுகளாகவே நமது அரசாங்கம் வாங்கும் கடன்கள், உற்பத்தியை அதிகரித்து செல்வத்தைப் பெருக்குவதற்குப் பதில், உற்பத்திக்கு உதவாத இனங்களிலும் ஊதாரித்தனமான செலவுகளிலும் விரயமாக்கப்பட்டு வருகின்றன. அரசு, மக்களுக்குச் சிக்கனத்தை உபதேசிப்பதோடு சரி! ஒரு தொழிலகம், வாங்கும் கடனை உற்பத்தியைப் பெருக்கப் பயன்படுத்தாமல் வீண் செலவு செய்தால் நஷ்டம்தானே அடையும்? அந்த நிலையில்தான் நமது அரசும் இன்று இருக்கிறது.

பணவீக்கம் பதினாறு சதவிகிதத்திலிருந்து ஆறு சதவிகிதமாகக் குறைக்கப்பட்டு விட்டதாக அரசு மார்தட்டுகிறது. ஆனால் இதை அரசு எப்படி சாதித்தது என்பதற்கு எந்தவிதமான விளக்கமும் இல்லை. அரசின் ஊதாரிச் செலவினங்கள் எதுவும் குறைந்து விட்டதாகத் தெரியவில்லை. ஆக, அபிவிருத்திப் பணிகளுக்கு ஒதுக்கப்படும் பணம் முடக்கப்படுவதன் மூலமே பணவீக்கம் குறைக்கப்பட்டுள்ளதாகக் கருத இடமுண்டு. இவ்வாறு அபிவிருத்திப் பணிகளை முடக்கினால் தேசம் தொழில், பொருளாதார ரீதியில் எப்படி துரிதமான முன்னேற்றம் காண முடியும்?

இன்றைய சூழலில் ஏற்றுமதியை அதிகரிப்பதே அரசின் முக்கிய குறிக்கோளாக இருக்க வேண்டும். அதற்கேற்ற திட்டங்களை வகுத்து அடிப்படை வசதிகளைப் பெருக்க வேண்டும். இதைச் செய்யாமல், மேலும் மேலும் அன்னியக் கடன்களைப் பெறுவதில் வெற்றி கண்டு அகமகிழ்ந்து போவதில் அர்த்தமில்லை. அது பொருளாதார அடிமைத்தனத்தில்தான் போய் முடியும்.

- வி. கோபாலன்

# நாளை அடிமைத்தனம்!

# We have a soft corner for pensioners.



*LTC Presents*

# *Pensioners Benefit Scheme*

Come and find the difference
only LTC provides.

LTC accepts deposits for 12 months too!
(Pensioners include Senior Citizens,
Ex-service Men, Widows, etc.)

LTC

**Personalised service**
**Special benefits**

***P.G. Saranyan***
*Chairman*

**LAKSHMI TRADE CREDITS LTD.**

*624, Anna Salai*
*MADRAS - 600 006.*
*Ph: 8276646, 8270311*

***Branches***

**Madras City : Ambattur Ph: 681860; Anna Nagar Ph: 6212047; Chrompet Ph: 401267; K.K. Nagar Ph: 4833917; Madipakkam Ph: 2346596; Nanganallur Ph: 2348593/2346066; West Mambalam Ph: 4830150; Valasaravakkam Ph: 4828567**

**Coimbatore Ph: 43576; Karaikudi Ph: 2023; Madurai Ph: 30626; Tirunelveli Ph: 322073; Trichy Ph: 25323**

# வெல்கம் மைக்கேல் ஜாக்சன்!

ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையும், வீட்டில் தன் அறையிலேயே டான்ஸ் செய்வார் மைக்கேல் ஜாக்சன். அன்று முழுவதும் பட்டினி இருப்பார்.



**நா**டி நரம்புகளைச் சுண்டி இழுக்கும் இசை. தாளம் போட வைக்கும் கவர்ச்சியான நடனம். உலகம் எங்கும் உள்ள கோடிக்கணக்கான ரசிகர்களின் உள்ளத்தில் குடியிருக்கும் மைக்கேல் ஜாக்சன், இன்று ஒரு மெகா ஸ்டார்.

''இப்படி முடிசூடா மன்னனாக இருப்பதைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?'' என்று கேட்டார் ஒரு நிருபர்.

''அதை எல்லாம் நினைத்துக் கொண்டிருந்தால் தலைக்கனம் ஏறி விடும். அதனால் அப்படி எல்லாம் நினைத்துக் கூடப் பார்ப்ப தில்லை!'' என்றார் மைக்கேல் ஜாக்சன், அடக்கமாக.

குடும்பமே இசைக் குடும்பம் தான். அண்ணன்கள், தங்கைகள் எல்லாருமே நன்றாகப் பாடுவார்கள். காரணம், அப்பா ஜோசப் ஜாக்சனும், அம்மா காதரீனும்தான்.

'த ஜாக்சன் ஃபைவ்' என்ற குழுவில் சகோதரர்கள் ஐந்து பேர் உண்டு. ஆரம்பத்தில், குழுவில் போங்கோஸ் மட்டுமே வாசித்துக் கொண்டிருந்த மைக்கேல், மளமளவென்று பாடவும், ஆடவும் தொடங்கினான். சகோதரர்கள் பார்த்தார்கள். ''தம்பி, நீதான் தலைவன்!'' என்று

பொறுப்பைச் சுமத்தி விட்டார்கள். ரசிகர்களும் வரவேற்றார்கள். "யார் எதைச் செய்தாலும், அதை அப்படியே செய்து காட்டுவான் மைக்கேல். அதிலும் அந்த ஸ்பீட் இருக்கிறதே, அவனுக்குக் கைவந்த கலை!" என்று அம்மா காதரீனே பாராட்டியிருக்கிறாள். "இதை எல்லாம் அவன் எப்படி, யாரிடம் கற்றுக் கொண்டான் என்று உண்மையில் எனக்குத் தெரியாது. ஆனால் அவனால் முடிகிறது!"

69-70களில், திடீரென்று பிய்த்துக் கொண்டு கிளம்பியது இசைக் குழு. அப்புறம் என்ன? ரெக்கார்டுகளை முறியடிக்கும் எல்.பி. ரெக்கார்டு விற்பனை. 'த்ரில்லர்' என்ற தலைப்புக் கொண்ட இசைத்தட்டு மட்டுமே ஒரு கோடிக்கு மேல் விற்றிருக்கிறது அந்த நாளில்!

பெண்ணின் சாயல். பளிச் பளிச்சென்று மாறும் முகபாவம். ஆடிப் பாட ஆரம்பித்து விட்டால் இளம் பெண்கள் கூடச் சேர்ந்து கொண்டு கூச்சலிட்டு ரசித்துக் கடைசியில் மயக்கம் போட்டு விழுவார்கள்!

"மேடையில் மட்டும்தான் நான் இப்படிக் கூத்தடிக்கிறேன். கும்மாளம் போடுகிறேன். வீட்டில் தனியே இருக்கும் போது என்னைப் பார்த்தால் அப்பாவி மாதிரி இருக்கும்!" என்கிறார் மைக்கேல்.

மைக்கேல் ஜாக்சனின் மறுபக்கம் பற்றிப் பலருக்கும் தெரியாது.

கோடிக்கணக்கான டாலர்கள் சம்பாதித்தாலும், கல்விக்காக இவரைப் போல வாரி வாரிக் கொடுத்தவர் வேறு யாரும் இருக்க முடியாது. குறிப்பாக, கறுப்பர் இனக் கல்வி வளர்ச்சிக்கு. மைக்கேல் ஜாக்சன் ஸ்காலர்ஷிப் ஃபண்ட் முழுக்க முழுக்க இதற்காகவே நிறுவப்பட்டது. 42 கல்லூரிகளையும், பல்கலைக் கழகங்கள் சிலவற்றையும் நடத்த யுனைடெட் நீக்ரோ காலேஜ் ஃபண்ட்டுக்கு முதல் நன்கொடையாக ஆறு லட்சம் டாலர் கொடுத்தார். ஃபிஸ்க் பல்கலைக் கழகம் இதற்காகவே இவருக்கு டாக்டர் பட்டம் வழங்கிக் கௌரவித்தது!

கலிஃபோர்னியாவில் சான்டா பார்பராவில், 2700 ஏக்கர் நிலப் பரப்பில் இவர் குழந்தைகளுக்காகவே அமைத்திருக்கும் அதிசய உலகம், பிரமிக்க வைக்கும். பஸ்கள் நிறையக் குழந்தைகள் வந்து இறங்கி இங்கே கும்மாளம் அடிப்பது உண்டு. மைக்கேல் ஜாக்சனே அவர்களை அழைத்துச் சென்று ஒவ்வோர் இடமாகக் காண்பிப்பதும் உண்டு. குறிப்பாக, சாவின் தொடு முனையில் இருக்கும் புற்றுநோய்க் குழந்தைகளை மைக்கேலே வரவழைப்பார். இந்த "ஜேக்சன்ஸ் நெவர்லேண்ட்" ஒரு டிஸ்னிலாண்ட் போலத்தான்.

"ஒருநாள் ஒரு பஸ் நிறையக் குழந்தைகள் வந்து இறங்ினார்கள். எல்லோர் தலையும் மொட்டை போட்டிருந்தது. எல்லாருமே கான்ஸர் நோயாளிகள்! சுற்றிச் சுற்றிக் கும்மாளம் போட்டு ரசித்து விட்டு எல்லாரும் பிரிய மனமின்றிப் புறப்பட்டார்கள். ஒரு குழந்தை என்னிடம் வந்து, "என்னுடைய வாழ்க்கையில் இன்றுதான் மிகச் சிறந்த நாள்!" என்று சொன்னான். என் கண்ணீரைக் கஷ்டப்பட்டு நான் கட்டுப்படுத்திக் கொண்டேன்!" என்றார் மைக்கேல் ஜாக்சன், ஒரு பேட்டியில்.

இரவு படுக்கப் போகும்பொழுது, கழுத்தில் ஒரு சிறிய மணி மாதிரி டார்ச் லைட் ஒன்றைக் கட்டிக் கொண்டு படுப்பார் : புத்தகம் படிக்க!

"நான் கிறிஸ்துமஸ்ஸைக் கொண்டாடுவதில்லை. பிறந்த நாளும் கொண்டாடுவதில்லை! எனக்குத் தெரிந்ததெல்லாம் வேலை, வேலை, வேலைதான்!"

ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையும், வீட்டில் தன் அறையிலேயே டான்ஸ் செய்வார் மைக்கேல் ஜாக்சன். அன்று முழுவதும் பட்டினி இருப்பார்.

"நாள் முழுக்க ஆடிப் பாடி, சோர்ந்து துவண்டு விழுவான்" என்கிறார் அம்மா காதரீன்.

"பாடல்கள் எழுதுகிறீர்கள். பாடுகிறீர்கள். ஆனால் ஏன் அவற்றை உங்களுடைய படைப்பு என்று அறிவிக்கத் தயங்குகிறீர்கள்?" என்று ஒரு பத்திரிகையாளர் கேட்டார்.

"நான்தான் இவற்றைப் படைத்தேன் என்று மார்தட்டிக் கொண்டு சொல்லுவது தவறு என்று நினைக்கிறேன். காரணம், இது 'மேலே இருந்து' வருகிறது. இசை என் மூலமாக வெளிப்பட நான் ஒரு கருவியாக இருக்கிறேன் என்பதில்தான் எனக்கு மகிழ்ச்சியும், திருப்தியுமே. என் வழியாக இசை பாய்கிறது. அதற்கு நான் எப்படிப் பெருமையடித்துக் கொள்ள முடியும்? அது கடவுளின் விருப்பம். அவன் செயல். என்னை 'அவன்' பயன்படுத்திக் கொள்ளுகிறான். நான் அவனுடைய தூதன். அவ்வளவுதான்!" (நம்மூர் 'இசைஞானி' மாதிரி பதில் இருக்கிறதோ?)

எப்போதாவது வெளியே காரில் தனியாகச் செல்வதுண்டு - சர்ச் அல்லது வெஜிடேரியன் ரெஸ்டாரன்ட்டுக்கு.

இந்தியாவுக்கு வரப் போகும் மைக்கேல் ஜாக்சனின் சாப்பாட்டைக் கவனித்துக் கொள்ள ஒரு தமிழருக்குத்தான் பொறுப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது! மைக்கேல் ஜாக்ஸன் இந்தியாவுக்கு வர ஒன்றரை மில்லியன் டாலர்கள் தரப்படுகிறது. அதாவது நாலு கோடியே எழுபது லட்சம் ரூபாய்! இவ்வளவு காஸ்ட்லி பாட்டு அந்நியச் செலாவணி நெருக்கடியில் நமக்குத் தேவையா என்பது ஒருபுறமிருக்க, இவர் இசையைக் கேட்க வேண்டுமானால் டிக்கெட் விலை ரூபாய் ஆயிரத்துக்குக் குறைந்து கிடையாதாம்!

– சாருகேசி



# இன்னும் எத்தனை நாட்கள்தான் இப்படி...?



ற்றவர்கள் ஆங்கிலத்தில் பேசுவதை ஓரளவு புரிந்து கொள்ள முடிந்தும், அவர்களிடம் ஆங்கிலத்தில் பேசினால் ஏதாவது தவறாகப் பேசி விடுவோமோ என்று பயந்து கொண்டு எத்தனை நாட்கள்தான் மௌனம் சாதிக்கப் போகிறீர்கள்?

ஆங்கிலத்தில் பேசக் கற்றுக் கொள்வது அப்படியென்ன கடினமான விஷயமா என்ன?

நீங்கள் நினைத்தால், ஆறே மாதங்களில் இம்மொழியைச் சுலபமாகக் கற்றுக்கொண்டு, சரளமாகப் பேச முடியும்.

ஆம்... விவேகானந்தா கல்வி நிலையம் அளித்து வரும் ஓர் எளிய பயிற்சியினை நீங்கள் மேற்கொண்டால் போதும்.

தவறாகப் பேசி விடுவோமோ என்ற பயமின்றி ஆங்கிலத்தில் மிகச் சரளமாகப் பேசும் ஆற்றலை நீங்கள் நிச்சயம் பெற முடியும்.

இதுவரை இரண்டு லட்சத்திற்கும்மேற்பட்டவர்கள் இப்பயிற்சியில் சேர்ந்து பயனடைந்துள்ளனர்.

வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் தபால் மூலம் இப்பயிற்சியினை நீங்கள் மேற்கொள்ளலாம்.

பயிற்சிக்காக தினசரி அரைமணி நேரம் செலவிட்டால் போதும்.

இனியும் தயக்கம் ஏன்?

இன்றே ஒரு போஸ்ட் கார்டில் உங்களது முகவரியைத் தெளிவாக எழுதி, எங்களுக்கு அனுப்புங்கள்.

பயிற்சி பற்றிய விபரங்களை உங்களுக்கு உடனே அனுப்பி வைக்கிறோம்.

"நேர்முகப் பயிற்சியும் உண்டு."



**விவேகானந்தா கல்வி நிலையம்**

9, நடேசன் தெரு, தி.நகர், சென்னை-600 017.

**அணு**

*அணு உலகில் உண்மையானது வடிவம் என்பது வேறு விதமானது. வெட்டவெளியில் ஓரிடத்தில்தான் ஒரு துகள் நிலைத்து நிற்கிறது என்று சொல்வது தவறு. அங்கே நடப்பதெல்லாம் நிச்சயமாக நடப்பதில்லை. அணுத்துகள் ஓரிடத்தில் இருக்கும். இல்லாமலும் இருக்கும். துகள் என்றும் பார்க்கலாம். மற்றொரு கோணத்தில் அலைகளாகவும் பார்க்கலாம்.*

*– க்வாண்டம் சித்தாந்தம்*

## எச்சரிக்கை!

*கடைசி மூன்று வாரங்கள்!*
*ஹலோ, செந்தில்நாயகம்!*
*உயில் எல்லாம் எதற்கு? உற்சாகமாய்ச் செலவிடுங்கள்!*

நிலாவின் 'சொர்க்க நகரை' விவரிக்கும்,

### அத்யம் – ஐ

ஏர்-கண்டிஷன் செய்யப்பட்ட அறை.

"மீண்டும் தொந்தரவுக்கு வருந்துகிறோம் மிஸ்டர் ஆர்யா" என்று நுழைந்தார் ZEL போஃபிஸர்.

"யூ ஆர் வெல்கம்."

"சோட்டி பற்றிச் சில தகவல் தேவை."

"சோட்டி யார்?"

"சமீபத்தில் மறைந்து போன உங்க ப்ராஜக்ட் உதவியாளர்."

"யெஸ். யெஸ். மறந்து விட்டது. குட் கர்ள். கடைசியா 'ப்ராஜக்ட் ப்ரெய்ன்' வொர்க் பண்ணோம்."

"வேறு ப்ராஜக்ட் கூட உண்டா?"

"ப்ராஜக்ட் சொர்க்கம் ஏறத்தாழ முடிந்து விட்டது. அதில் சோட்டியின் டிஸைன் பார்டர் ஓவர். இப்ப ப்ராஜக்ட் இம்ப்ளிமென்டேஷன் முடியற நேரம். அடுத்த மாதம் நீங்ககூட ஜாலி டிரிப் சந்திரன் போலாம்."

"சந்திரனுக்கு நானா?"

"யெஸ். நீங்களேதான். தட்ஸ் ப்ராஜக்ட் சொர்க்கம். நாளுக்கு நாள் ஜனத்தொகை அதிகமாறதால, ஆத்மாவால் கட்டுப்படுத்த முடியல. ஸோ, சமீப எதிர்காலத்தில் வேறு இரக குடியிருப்பு அத்தியாவசியம். தலைமைப் பொறுப்பை ஆத்மா என்னிடம் விட்டது. சந்திரனைத் தேர்ந்தெடுத்தோம்."

"சந்திரனில் குடியேற்றமா? கதை போல் உள்ளது." போஃபிஸர் வந்த வேலை மறந்தார். ஆர்யாவும் காது கொடுக்க, ஓர் ஆள் கிடைத்த மகிழ்ச்சியில் விஸ்தாரமாக விவரிக்க ஆரம்பித்தார்.

"இன்றைய தேதியில் ப்ராஜக்ட் ஹெவன் 98 சதம் முடிந்து விட்டது. சந்திரனில் குடிபோக வேண்டியது பாக்கி. அங்கே பாதாள நகரங்கள் அமைத்தாகி விட்டது."

"பாதாள நகரமா?"

"முதலில் விண்வெளியில் பறக்கும் காலனிகளைத்தான் திட்டமிட்டோம். அதில் பல சிக்கல்கள். சூரிய கதிரியக்கம் தாங்கக்கூடிய - லேசான, ஆனால் வலுவான உலோகம் தயாரிக்க முடியவில்லை. இயற்கை இடர்களும் அதிகம். தகர்க்கும் அஸ்ட்ராயிடுகளை எதிர்கொள்வது சிரமம். எனவே சந்திரனில் நகர்களை உருவாக்கி விட்டோம்."

"சந்திரனில் சுவாசிக்க முடியாதே."

"அதெல்லாம் இரண்டாம்தர தேவை. சந்திர பரப்பில் ரோபோக்கள் இயக்கும் ஒரு ஆட்டோமேடிக் ஆக்ஸிஜன் ப்ளான்ட் உருவாக்கி விட்டோம். நிலத்தடி வாழ்க்கை பத்திரமானது. சீதோஷ்ண மாறுதல் இல்லை. 14 நாள் பகல் 14 நாள் இரவு இல்லை. வேண்டிய வெப்பம், வேண்டிய இரவு பகல் அமைத்து விட்டோம். சூரிய சக்தி சேகரிக்க ஒரு ரோபோடிக் சோலார் பவர் ஸ்டேஷன் செய்தாகி விட்டது. என்ன போஃபிஸர் சார்... எந்த உலகில் இருக்கிறீர்கள்? நேற்று [illegible] சேவையில்

# ஆத்மாவுக்கு ஆபத்து



ப்ராஜக்ட் ஹெவன் பற்றி இதெல்லாம் விஸ்தரித்தோமே பார்க்கவில்லையா?''

''எங்கே இந்த மர்ம மனிதனைப் பிடிக்கும் வேலையில் சாப்பிடக் கூடத் தோன்றவில்லை. பயமாக வேறு உள்ளது. ஊர் விட்டு ஊர் பறந்து கொண்டிருக்கிறான்.''

''சந்திரனின் சொர்க்க நகரில் இதெல்லாம் நடக்காது. நீங்களே பறந்து போய்ப் பிடிக்கலாம்.''

''விளையாடாதீங்க ஆர்யா சார்.''

''விளையாட்டில்லை, நிஜம். அங்கு சந்திர புவிசர்ப்பு விசை நமது விசையை விட ஆறில் ஒரு பங்கு. நம் எடை குறைந்து விடும். ஃபைபர் இறக்கை கட்டிக் கொண்டு நீங்களும் நானும் பறந்து கொண்டே பேசலாம்.''

''எத்தனை பேர் குடி போகலாம்?''

''இந்த வாரம் பரிசோதனைக்காக இருவர் மட்டுமே. டிரயல் விசிட். ஒவ்வொரு ஜந்துவிலும் வகைக்கு இரண்டு.''

''காது குத்தாதீங்க... உலகில் உயிரினங்கள் அழிந்து பல வருடமாச்சே!''

''ஆமாம். அதனால்தான் மியூஸியத்தில் இருந்து இறந்த மிருக உடல்களை மட்டும் ஒரு சாஸ்திரத்துக்காக அனுப்பப் போகிறோம். அடுத்த வருடம் முதல் பொது மக்கள் செல்ல வசதி வந்து விடும். முதலில் 1000 பேர் செல்லலாம். இப்பவே மூன்று வருடங்கள் வரை அட்வான்ஸ் புக்கிங் முடிந்து விட்டதே. அதுசரி, சாருக்குக் கல்யாணம் ஆச்சா?''

''ஹிஹி. இன்னும் ஆத்மாவின் அனுமதி கிடைக்கலை.''

''அப்ப உங்க ஹனிமூன் நிஜ நிலவின் சொர்க்க நகரில்தான்!'' கண்ணடித்தார் ஆர்யா.

''ஜொம்பறேன் மிஸ்டர் ஆர்யா... அப்படியே சொர்க்க நகருக்கு ஒரு டிக்கெட் நீங்க தான் பொரிக பண்ணனும்.''

''பார்க்கலாம்... முதன்மைப் பிரஜை கோட்டால டிரை பண்றேன்.''

''கட்டாயம்?''

''ஷ்யூர். அது சரி... சோட்டி பற்றி ஏதோ கேட்க வந்தீர்களே?''

''சோட்டி பற்றி... அது வந்து... சரி அகப் பிறகு பாத்துக்கலாம். உங்க கூட பேசி எனக்கும் மறதி. விசாரிக்க என்ன பலன்? கிடைக்கவா போகிறான்? எல்லாம் ஆத்மாவின் சித்து வேலை. மக்கள் தொகை குறைக்க மறைய வைக்கிறார்கள். சந்தேகம் வராதிருக்க ஆத்மாவுக்கே ஆபத்தாம். ரீல்... இதெல்லாம் நான் சொல்லலை ஆர்யா சார். மக்கள் பேசிக்கிறாங்க... யாரோ மறை

நளினி சாஸ்திரி

யட்டும். சந்திரனுக்கு டிக்கெட் மறந்திட வேண்டாம்.''

''எந்த சந்திரன்?''

''அதான் நிலா''

''எந்த நிலா?''

''ப்ராஜக்ட் ஹெவன்.''

''எந்த ப்ராஜக்ட்?''

''பாழாப் போச்சு. பைத்தியம் பிடிக்கறதுக்குள்ளே கிளம்பிடறேன்.''

''யாருக்குப் பைத்தியம்?''

அந்த வானடாக்ஸி 600 கி.மீ. வேகத்தில் காற்றைக் கிழித்துக் கொண்டிருந்தது. பறவைப் பார்வை பார்த்தான் குரு. பசுமை காணாமல் போயிருந்தது. எங்கும் வீடுகள். நகரங்கள். நரகமாகிக் கொண்டிருக்கும் உலகம்.

''உன் பெயரென்ன?'' குரு கேட்டான்.

''ஜான்'' என்றான் டாக்ஸி பைலட்.

''இது உன் சொந்த டாக்ஸியா?''

'''இல்லை, அரசுடைமை. வான ஊர்திகள் யாவும் அரசின் கட்டுப்பாடு.''

''நீ டாக்ஸி டிரைவராகக் காரணம்?''

''நான் டாக்ஸி பைலட். இந்தத் தொழிலில் கம்ப்யூட்டர் போட்டி வராது என்று தோன்றியதால் தேர்ந்தெடுத்தேன்.''

''வேகம் இவ்வளவுதானா?''

''வாகனங்களில் ஸ்பீட் கண்ட்ரோலர்கள் உண்டு. தரைக் காரின் அதிகபட்ச வேகம் 150 கி.மீ. வானக் கார்களின் வேகம் 600 கி.மீ.''

''இந்தியப் பகுதிக்குச் செல்ல எவ்வளவு நேரமாகும்?''

''அவ்வளவு தொலைவு செல்ல எங்களுக்கு அனுமதியில்லை. அதற்கு நீங்கள் ராக்கெட்டில்தான் போகணும். ஒரு மணியில் இந்தியா போகலாம். இன்னும் 10 நிமிடத்தில் ராக்கெட் தளம் S2 வில் விடுகிறேன். அதற்கு நிறைய ரூ தேவைப்படுமே? நீங்கள் அரசு முதன்மைப் பிரஜையா?''

"ஏம்பா, உங்க முதலாளி ஏற்கெனவே பத்திரிகை நடத்திக்கிட்டு இருந்தாரா?"

"எப்படிச் சொல்றீங்க?"

"பேப்பர் ரோஸ்ட் மூலையிலே 'உப்பைக் கூட்டவோ, எண்ணெயைக் குறைக்கவோ எங்களுக்கு முழு உரிமை உண்டு'ன்னு எழுதி இருக்கே?"

- அதிரை யூசுப்



''இல்லை... நான் ஒரு சாதாரண உலகப் பிரஜைதான். உடனே இந்தியா செல்ல வேண்டும்.''

''பத்தே நிமிடம்... S2 வந்து விடும்.... அதுவரை விவி பாருங்களேன்...'' என்ற ஜான், விவி பட்டனைத் தட்டினான். அலெக்ஸிடமிருந்து பெற்ற கத்தை ரூவை குரு தொட்டுப் பார்க்கையில், விவியில் அந்த எச்சரிக்கை அழைத்தது.

''உலகப் பிரஜைகளின் மறைவுக்குக் காரணமான, சந்தேகத்துக்குரிய மர்ம மனிதன் கிழக்கு திசை நோக்கிப் பறந்து கொண்டிருப்பதாக நம்பப்படுகிறது. குறிப்பாக கடைசி தகவல்படி டாக்ஸி எண் 2XY-560A260 யில் ஏறியதாகத் தெரிகிறது. பைலட் ஜான் எங்கிருந்தாலும், உடன் உளவுத் துறையுடன் தொடர்பு கொள்ளவும். அவசியம். அவசரம்.''

''உலகப் பிரஜைகளின் மறைவுக்குக் காரணமான,......''

எச்சரிக்கை மறுபடியும் தொடர்ந்து ஒலிபரப்பானது.

திடுக்கிட்டான் ஜான். அதிர்ச்சியுடன் குருவைப் பார்த்தான்.

''நிற்காதே போய்க் கொண்டேயிரு.''

''சார் தேடப்படும் மனிதன் நீங்களா?''

''நானேதான்.''

''மன்னிக்க வேண்டும். உங்களைப் பற்றி உடனே தெரிவிக்க வேண்டியது என் கடமை.''

''உன் விசுவாசம் புரிகிறது.. நான் ஜனித்த ஊர் சென்று கொண்டிருக்கிறேன். பிறகு சொல். எவ்வளவு ரூ வேண்டும்?''

''சொல்லாவிட்டால், எப்படியும் மோப்பம் பிடித்து வந்து விடுவார்கள். என் வேலை போய் விடும். மன்னிக்கவும்.''

''ம்... சரி சொல்.'' குரு முடிவு செய்தான்.

வயர்லெஸ் இணைப்பை எடுத்து ஜான் போலீஸை அழைத்தான்.

''தாங்கள் தேடும் நபர் என் வண்டியில் பிரயாணம் செய்கிறார். நாங்கள் ராக்கெட் தளம் S2 சென்று கொண்டிருக்கிறோம். ஓவர்.''

ஜான், குருவை நன்றியுடன் பார்த்தான்.

''உங்களை ஏன் தேடுகிறார்கள்? மனிதர்கள் மறைவில் உங்களுக்கு என்ன சம்பந்தம்?''

''அது விநோதம். நீ ஆசைப்பட்டால் சொல்கிறேன்.''

''உலகமே எதிர்பார்க்கும் புதிரைத் தெரிந்து கொள்வதில் யாருக்குத்தான் ஆர்வம் இருக்காது?''

''என் பெயர் ஸ்ரீநிவாஸகுரு.

என் வயது 518.

இந்தியாவில் சேலம் மாவட்டம் கோவிந்தம்பாளையத்தில்...''

# மந்திரி சபையைத் திருத்திய விசு!

"'நீங்க நல்லா இருக்கணும்' படம் தோல்வியடைந்தது பற்றி?"

"இந்தப் படம் தொடங்கப்பட்ட பொழுது 'பார்'கள் மூடப்பட்டிருந்தன. இரண்டாவது கட்டப் படப்பிடிப்பு நடை பெறும் நேரத்தில் அவை திறக்கப்பட்டு விட்டன. படம் எப்படி ஓடும்? படத்தின் தோல்வி அரசை யோசிக்க வைத்தது. அதனால் மீண்டும் 'பார்'கள் மூடப்பட்டன. மக்களைத் திருத்துவதற்காக எடுக்கப்பட்ட படம் மந்திரிசபையைத் திருத்தியது."

- அண்மையில் ஏ. ஜி. அலுவலகத்தில் நடைபெற்ற நேருக்கு நேர் நிகழ்ச்சியொன்றில்



இயக்குனர் விசு கூறிய பதில்களில் ஒன்று.

- எஸ். இராம்குமார்

---

ஜான் கண்கள் விரியக் கேட்டான்.

~~~~~ ~~~~~~~~~ ~~~~~~~~ ~~~~~~

~~~~~~ ~~~~~~~~~ ~~~~~~~ ~~~~~~~

~~~~~~ ~~~~~~~~~ ~~~~~~~ ~~~~~~~

~~~~~~ ~~~~~~~~~ ~~~~~~~ ~~~~~~~

இதற்குள் செய்தி பரவியது. உளவுத் துறை வாகனங்கள் அதிகாரிகள் புடைசூழ, S2 தளத்துக்கு விரைந்தன. அதற்கு முன், மூக்கு வியர்த்த வி.வி.காரர்கள் பல கோணங்களில் கேமிராவை போகஸ் செய்து கொண்டிருந்தார்கள். அதிரடி கமாண்டோப் படையினர் மறைந்திருந்தனர். எல்லாவித எச்சரிக்கை நடவடிக்கைகளும் உடனே, உடனே எடுக்கப்பட்டன.

அனைவரும் ஆவலுடன் எதிர்பார்த்த அந்த டாக்ஸி விண்ணில் தடுமாறியது. தரை நெருங்கத் தயங்கியது. வேகம் குறைய மறுத்து ஒருவித பலாத்காரத்துடன் தரை தட்டியது. டயர்கள் எரிந்து நின்றது.

போலிஸர்கள் லேசர் துப்பாக்கியுடன் சுற்றி வளைத்துக் கொண்டனர். சற்று நேரம் அமைதி. கமாண்டோக்கள் பூனை போல் பதுங்கி பின்புறமாய் நெருங்க, விடியோ கேமிராக்கள் மும்முரமாய் இயங்கின.

யாரும் எதிர்பாராவண்ணம் சட்டெனக் கதவு திறந்து வெளிப்பட்டான் ஸ்ரீநிவாஸ குரு. அந்நியப் பார்வை வீசினான். சுற்றி வளைத்த கமாண்டோக்கள் குருவைப் பிடித்துக் கைகளில் விலங்கு மாட்டினார்கள். குரு அலட்சியமாகக் கை நீட்டினான்.

''உன் பெயர் என்ன?''

''..........''

''மனிதனே யார் நீ?''

''..........''

அதற்குள் டாக்ஸிக்குள் எட்டிப் பார்த்த ஒரு போலிஸர் அதிர்ந்து கத்தினார்.

''பைலட் ஜான் இல்லை.''

எல்லாரும் பிரமித்தார்கள். டாக்ஸி ஆட்டோ லேண்டிங் மோடில் மாற்றப்பட்டிருந்தது. கிராஷ் லேண்ட் ஆகாமல் தப்பியது எப்படி என்று வியந்தார்கள்.

''ஏய் ஜான் எங்கே? என்ன செய்தாய்?''

''..........''

''நாயே பேசு! ஜானை என்ன செய்தாய்? கீழே தள்ளி விட்டாயா?'' ஒரு போலிஸர் குருவின் பின்புறம் துப்பாக்கியால் குத்தினார்.

குரு, நின்று முறைக்க பயந்து அடங்கினார்.

''ஐந்து நிமிடம் முன்வரை ஜானிடம் இருந்து மெஸேஜ் வந்ததே. கீழே விழ வாய்ப்பில்லை.''

''எனில் என்ன ஆனான்? இவன் பேச மறுக்கிறானே?''

''இங்கு ஒன்றும் வேண்டாம். தலைமையகம் கொண்டு போய்க் கக்க வைக்கலாம்.''

கைகளைப் பிடித்துத் தரதரவென இழுத்துப் போனார்கள். விவிக்காரர்கள் துரத்தினார்கள். கேமிராக்கள் பளிச்சிட்டன.

''மனிதனே... பயப்படாதே! தைரியமாகப் பேசு!'' கூட்டத்தில் ஒருவன்.

''நீ கடவுள்தானே!''

''சார்... இதில் ஒரு ஆட்டோகிராப் ப்ளீஸ்...'' சிரித்த குரு நின்று, விலங்குடன் கையெழுத்திட்டான்.

அதற்குள், டாக்ஸி உட்பகுதி பூராவும் மைக்ரான் விடாமல் பரிசோதிக்கப்பட்டது. ஜான் வாசனை கூட மிச்சம் கிடைக்கவில்லை.

(தொடரும்)

# அமைச்சர் போட்ட உத்தரவு

ரமணா காப்பி கிளப்.

அந்த ஊரின் பிரதான சாலையாரத்திலேயே இருந்தது. பழைய கட்டடம்தான். வியாபாரமும் சுமார்தான்.

ஆனால் அதைப் பற்றி அதன் முதலாளி ரமணய்யர் கவலைப்படவில்லை.

''வரும் வருமானமே போதும். கிராமத்துல மூணு வேலி நிலம் இருக்கு. சாப்பாட்டுக்குக் கவலை யில்லை. மேல் செலவுக்கு இந்த ஹோட்டல் வருமானம் யதேஷ்டம்'' என்பார்.

ஆனால் இந்த காப்பி கிளப்புக்கென்றே பல வாடிக்கையாளர்களும் உண்டு. காப்பியாகட்டும், டிபன் ஆகட்டும் தரமாய் இருக்கும். ரமணா காப்பி கிளப்பின் இன்னொரு ஸ்பெஷாலிடி ரமணய்யரின் உபசரிப்பு. ஒவ்வொருவரையும் தனித்தனியாய் விசாரிப்பார். பேச ஆரம்பித்த ஐந்தே நிமிடத்தில் குடும்ப விஷயம் பொதுவாகி விடும். அவ்வளவு அன்னியோன்னியம் அவர் பேச்சில்.

இப்போது கூட அப்படித்தான்.

''வாங்கோ சார். என்ன சாப்பிடறேள். ஏதோ பெரிய யோசனை போலிருக்கு...'' என்று வரவேற்றார் உள்ளூர் தணிகாசலத்தை.

''ப்ச, போங்க ஐயரே...''

''என்ன இப்படி அலுப்பு? எனக்குப் புரிஞ்சு போச்சு. வயிற்றைத் திருப்திப்படுத்திட்டாலே பாதி விரக்தி ஓடிடும். டேய் அம்பி, சாருக்கு ஸ்பெஷல் ரவா போடுடா'' என்று குரல் கொடுத்தார்.

''பையன் பிரச்னை தானே? கவலையை விடுங்கோ. அவன் மூல நட்சத்திரம்தான். இப்ப லக்னத்துல சனி. அதான் படுத்தறான். ஆண் மூலம் அரசாளும். கவலையேபடாதீங்கோ'' என்று ஆறுதல் படுத்தினார்.

ரமணய்யரின் ஸ்பெஷாலிடியே அதுதான்.

வாயில் எப்போதும் நல்ல வார்த்தைதான் வரும். அவரிடம் பகிர்ந்து கொண்டால் அவரது பேச்சின் மூலம் ஒரு தைரியம் கிடைக்கும்.

''எப்படி ஐயரே உங்களாலே இப்படி சிரிச்ச முகமா இருக்க முடியறது?''

''நாம மத்தவாளுக்கு நல்லது நினைச்சா நமக்கும் பகவான் அதையே கொடுத்துட்டுப் போறான். வாய் எதுக்கு இருக்கு? நாலு நல்ல வார்த்தைகளைப் பேசத்தானே?'' என்றார்.

அப்போது கட்சிக் கரை வேட்டி, சட்டையுடன் இரண்டு பேர் உள்ளே நுழைந்தனர்.

''அடேடே, வாங்கோ. என்ன சாப்பிடறேள்?''

''நாங்க சாப்பிட வரலே ஐயரே. உங்களோட பேச வந்திருக்கோம்.''

''பேஷாய் பேசலாம்! அதுக்கு முன்னாடி ஒரு வாய்க் காப்பியாவது குடிங்கோ. முதல் டிகாக்ஷன். ஏ கிளாஸ் காப்பி'' என்று கடைப் பையனுக்குக் கண் காண்பித்தார்.

அவர்கள் காப்பி குடிக்கும் வரை காத்திருந்தார்.

''ரெண்டு ரூபாய்தான் பில்'' என்று நீட்டினார்.

''ஐயரே...''

''சொல்லுங்கோ...''

''நாங்க தலைவர் மாரிசாமியோட நண்பர்கள்.''

''ஓஹோ. சந்தோஷம்.''

''தலைவரைப் பற்றி...''

''தெரியாம என்ன? ஊர் நகராட்சித் தலைவர். ஆளும் கட்சி ஆள். ஆள்பலம், பணபலம் உள்ளவர். அவரைப் பற்றி குழந்தைக்குக் கூடத் தெரியுமே''

''அப்ப நாங்க வந்த வேலை சுளுவா முடிஞ்சுடும்.''

''என்ன வேலை?''

''ஐயரே, நம்ம தலைவர் பக்கத்துக் கட்டடம் இரண்டையும் வாங்கிட்டார்.''

''அவர் வாங்கறதுக்குக் கேட்கணுமா?''

''உங்க கடையையும் கொடுத்திட்டீங்கன்னா எல்லாத்தையும் இடிச்சுட்டு ஒரு பெரிய ஷாப்பிங் காம்ப்ளெக்ஸ் கட்டலாம்னு அவர் திட்டம்.''

''நாராயணா!''

''என்ன ஐயரே?''

''இதைக் கொடுத்துட்டு நான் என்ன பண்றது?''

''நீங்க எதிர்பார்க்கறதுக்கு மேலேயே காசு தரோம் ஐயரே. அதை வைச்சு வேற



இடத்துல இந்தக் கடையை நடத்துங்களேன்'' என்றவர்களைப் பார்த்தார்.

''இது காசு மட்டும் சம்பந்தப்பட்ட விஷயமில்லை.''

''என்ன சொல்றீங்க ஐயரே?''

''எங்க பரம்பரைச் சொத்து இது. எங்கப்பாவுக்கு இதே கல்லாவிலே உட்கார்ந்திருக்கும் போதுதான் உயிர் போச்சு. பணத்துக்கும் மேலே ஒரு பிடிப்பு இந்த இடத்து மேலே எனக்கு.''

''என்ன பத்தாம்பசலித்தனமாய்ப் பேசறீங்க?''

''உண்மைதான். இந்த இடம் எனக்கு வாழ்க்கையிலே ஓர் உற்சாகத்தைத் தருது. எங்க அப்பா, தாத்தாவெல்லாம் இங்கேயே அரூபமாய் இருந்துண்டு என்னோட வாழற மாதிரி ஒரு பிரமை. அது மட்டுமில்லே,

கிருஷ்ணா

என் ஹோட்டல் டிபனை விட என்னோட பேசணும்னு விரும்பி வர வாடிக்கையாளர் வேற இருக்கா. இதையெல்லாம், இந்த சுகத்தையெல்லாம் வார்த்தையிலே கொண்டு வர முடியாது. அனுபவிச்சாத்தான் புரியும்.''

''முடிவா என்ன சொல்ற ஐயரே?''

''நான் விற்கறதா இல்லை.''

''நாங்க யாருன்னு தெரியுமில்லே?''

''நல்லாத் தெரியும். உங்களோட மோதற அளவுக்குப் பலசாலி இல்லை நான். சாதாரண நடுத்தர வர்க்கம். இருந்தாலும் பகவான் இருக்கார். அவர் நினைக்கிறபடிதானே நடக்கும் எல்லாம்'' என்றார் அமைதியாய்.

''ஒரே வாரத்துல உன் கடை காணாமப் போயிடப் போகுது பாரு'' என்று மிரட்டி விட்டு வெளியேறினர் இருவரும்.

''என்ன இப்படி மிரட்டிட்டுப் போறாங்க?'' என்றார் தணிகாசலம் இத்தனை நேரம் வேடிக்கை பார்த்தவராய்.

''நான் யாருக்கும் கெடுதல் நினைக்கறதுல்லே. காலி பண்ணணும்னு அவன்

நினைச்சா காலி பண்ணித்தானே ஆகணும். கவலைப்பட்டு என்னாகப் போறது? சரி, நீங்க காப்பி சாப்பிட்டேளா?'' என்று வழக்கமான உபசரிப்புக்குத் திரும்பினார்.

அன்று ஊரே போஸ்டர் திருவிழா வாய் கலகலத்தது.

அந்தத் தொகுதியிலிருந்து சட்டசபைக் குத் தேர்ந்தெடுக்கப்பட்டு, ஒரு மாதம் முன் அமைச்சரான எம்.எல்.ஏ. முதன் முதலாய் இந்த ஊருக்கு வருகிறார்.

அலங்கார வளைவுகளும், பந்தல்களு மாய் அமர்க்களப்பட்டன.

மாரிசாமிதான் முன்நின்று அனைத்து ஏற்பாடுகளையும் கவனித்துக் கொண்டவர்.

அமைச்சருக்குப் பரம சந்தோஷம் இந்த ஏற்பாடுகளால் என்பது முகத்திலிருந்து தெரிந்தது.

''மாரிசாமி, அசத்திட்டீங்க. உங்க ளைப் பற்றி மேலிடத்துல கட்டாயம் சொல் றேன்'' என்றார் அமைச்சர் மீசையைத் தட வியபடி.

''ஐயா, ஒரு விண்ணப்பம்.''

''சொல்லுங்க.''

''இந்த ஊர் மெயின் ரோடு மேலே ஒரு காலி இடம் இருக்கு...''

''புரியுது. உத்தரவு போட்டுடறேன். என்ன செய்யப் போறீங்க?''

''ஒரு பெரிய ஷாப்பிங் காம்ப்ளெக்ஸ் கட்டலாம்னு திட்டம். பக்கத்துக் கட்டடங் களைக் கூட வாங்கிட்டேன். அதுக்குப் பின் னாடிதான் இந்த காலி இடம் இருக்கு. திறப்பு விழாவுக்குக் கூட நீங்கதான் வரணும்.'

''தாராளமாய்.''

''ஆனால் ஒரு சின்னப் பிரச்னை...''

''என்ன?''

''ஒரு சின்ன ஹோட்டல் நடுவுல வந்து மாட்டிக்கிச்சு. சொந்தக்காரன் இடத்தைத் தர மாட்டேங்கறான்.''

''பணத்தை அதிகமாய் விட்டெறிய வேண்டியதுதானே!''

''மசிய மாட்டேங்கறான். செண்டி மெண்ட்ஸ் பிரச்னை. நானும் எல்லாவித முயற்சியும் பண்ணிட்டேன்.''

அமைச்சர் யோசித்தார்.

''ஒண்ணு பண்ணலாமே!''

''என்னங்க?''

''அந்த இடம் முழுவதையும் அர சாங்கமே எடுத்துக்கிற மாதிரி ஒரு ரூல்ஸ் போட்டுடலாம்.''

''அப்ப என் இடமும்தானே...''

''அவசரப்படாதீங்க. நல்ல விலை கொடுத்து நஷ்டமில்லாம உங்ககிட்டயிருந்து வாங்கி, மறுபடியும் உங்களுக்காக லீசுக்குக் கொடுத்துட்டாப் போச்சு. அப்ப அந்த



''வீட்டுக்கு வர்றவங்களை வாசல் வரை போய் வழியனுப்பற நாகரிக மான பழக்கத்தைத் திடீர்னு கடைப் பிடிக்க ஆரம்பிச்சிருக்கீங்க போலி ருக்கே!''

''ஹி..ஹி.. அதொண்ணுமில்லே; புது செருப்பு வாங்கியிருக்கோமே, வாசல்ல போட்டு வைச்சிருக்கோ மேன்னு நினைப்பு வந்துடறது; அதனாலதான்....''

– கரம்.

## அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - 1993- பிரசுரத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட சிறுகதைகள்

1. நாளைய தலைவர்கள் - ரேவதி பாலு
2. கங்குமில்லை கரையுமில்லை - தாமரை செந்தூர் பாண்டி
3. மக்களால், மக்களுக்காக - "எஸ்வி" (எஸ். விஸ்வநாதன் - அறிமுக எழுத்தாளர்.)
4. சரவெடி - எஸ். அர்ஷியா
5. நாற்றுக்கள் - "ஸ்ரீகுரு" (ஆர். குரு மூர்த்தி)
6. வேகத்தடைகள் - புதுவை சந்திரஹரி
7. விட்டில் பூச்சிகள் - வெ. மகேஸ்வரன்
8. அப்பா கடை - கா.சு. வேலாயுதன்
9. கதைக் கேசட் - கே. தளவாய் சுந்தரம் (அறிமுக எழுத்தாளர்.)
10. கோடு - "விஸ்வரூபன்" (இரா. கணபதி)
11. பூமுகம் - தேவநாதன்
12. அவன் - "சிதம்பரம் சின்னராஜன்" (எஸ். நடராஜன்)
13. விஸ்வரூபம் - "கிருஷ்ணா" (என். பாஸ்கர்)
14. தத்வமஸி - மோகன்ராஜ் (அறிமுக எழுத்தாளர்)
15. திருச்சியிலிருந்து திருவோணம் வரை - தமிழினியன்
16. பரிமாறல்கள் - நவிவி சாஸ்திரி
17. தடயம் - வாசன்
18. இன்றுமுதல் மனிதன் - மாரிவேல்
19. மரியாதை - "கிருஷ்ணா" (என். பாஸ்கர்)

ஹோட்டல்காரன் இடமும் அரசாங்கத் தோட இடம் ஆயிடுமே. ஏதாவது புது திட்டம் அறிவிச்சு, அதை இந்த இடத்துல தான் செயல்படுத்தப் போறதாச் சொல்லிட்டாப் போச்சு."

அகமும், முகமும் மலர அமைச்சரைப் பார்த்தார் மாரிசாமி.

"நாங்க, உங்களிடமிருந்து நிறையக் கத்துக்கணும் ஐயா" என்று புகழ்ந்தார்.

"சரி, நான் ஒரு இடத்துக்குப் போகணும் இப்ப. அதுக்கு முன்னாடி நீங்க சொன்ன இடத்தைப் பார்த்துடலாம்."

கார்கள் பின்தொடர அமைச்சர் புறப் பட்டார். அவர் காரின் முன்சீட்டில் மாரி சாமி.

"ஐயா, இந்த இடம்தாங்க. இந்த ஹோட்டல்தான் நான் சொன்ன தகராறு பிடிச்ச இடம்" என்று காண்பித்தார்.

"இதுவா..." என்று யோசனையுடன் காரை விட்டு இறங்கி ஹோட்டலுக்குள் நுழைந்தார் அமைச்சர்.

"வரணும், வரணும். பெரிய மனு ஷாளே என்னைத் தேடி வந்திருக்கேள்" என்று வரவேற்றார் ரமணய்யர்.

"இதே ஆள்தான்" என்று முணு முணுத்தது அமைச்சரின் வாய்.

தாம் அமைச்சரான நாளை நினைத்துப் பார்த்தார்.

அன்று இந்த ஊருக்கு வந்திருந்தார் எம்.எல்.ஏவாய். ஆனால் அதிக பந்தா இல்லை. ஒரு துக்க சமாசாரம் சொந்தக்காரர் வீட்டில். துக்கம் விசாரித்து விட்டுத் திரும் பும் போது, லேசாகத் தலை வலித்தது.

"இந்த ஹோட்டல் காப்பி நல்லா இருக்கும்" என்று யாரோ தொண்டர் சொல்ல, சட்டென ஹோட்டலுக்குள் நுழைந்தார்.

அன்றும் இதே வரவேற்பு இவருக்கு.

"ஐயரே, நியூஸ் டைம் ஆச்சா? ரேடியோ போடுங்க" என்றார்.

"இன்னும் பத்து நிமிஷம் இருக்கு. அதுக்கு முன்னாடி ஒரு ரவா தோசை சாப்பிடுங்கோ" என்று ரமணய்யர் சொல்லி கடைப் பையனைப் பார்த்தார்.

"சார் யாரு?"

"இந்தத் தொகுதி எம்.எல்.ஏ."

"எம்.எல்.ஏவா? பெரிய மனு ஷாள்லாம் இந்த ஹோட்டலுக்கு வந்திருக் கேள். கொடுத்து வைச்சவன் நான்" என்றார் பவ்யமாய்.

"அண்ணே, அமைச்சரவையிலே மாற் றம் இருக்கும்னு சொல்றாங்களே," என்று ஒரு எடுபிடி பேச்சைத் திருப்பினான்.

உடனே இவர் குறுக்கே பாய்ந்தார்.

"உங்களுக்குச் சீக்கிரமே அமைச்சர் பதவி கிடைச்சுடும் பாருங்கோ. இந்த ஹோட்டலுக்கு வந்து சாப்பிட்டுப் போனா அப்படி ஒரு ராசி" என்றார் ரமணய்யர் தம் வழக்கமான பாணியில்.

எம்.எல்.ஏ. பெரிதாய்ச் சிரித்தார்.

"ஐயரே, நானாவது, அமைச்சராகற தாவது. யார் சிபாரிசும் இல்லை எனக்கு. பெரிய பெரிய திமிங்கலங்களே மோதிக் கிட்டு இருக்கு. சரி, ரேடியோவைப் போடுங்க" என்றார்.

ரேடியோவில் முதல் செய்தி அமைச் சரவை மாற்றம். புது அமைச்சர்களின் பட்டி யலில் இவர் பெயர்.

தலைகால் புரியாத மகிழ்ச்சியும், வியப் பும் அவருக்கு.

அமைச்சரின் மனதுக்குள் பசுமையாய் நினைவில் இருந்தது அந்த நாள்.

இந்த ஹோட்டலை இடிப்பதா?

மாரிசாமியின் பக்கம் திரும்பினார்.

"இந்த ஹோட்டலுக்கோ, இவருக்கோ எந்தப் பிரச்னையும் இல்லாம பாருங்க. இவர், எனக்கு வேண்டிய ஆள்" என்றார் உத்தரவாய்.

அமைச்சரின் திடீர் மனமாற்றத்துக்குக் காரணம் புரியாமல் விழித்தார் மாரிசாமி.



# 30. குயவன் கை மண்

எத்தனை ஆயிரம் ஆண்டுகள் ஆனாலும் பெண்ணினத்திடம் ஆண்களுக்கு உண்டாகும் ஈர்ப்பில் இன்று வரை எந்தவித மாறுதலும் இல்லை. முன்பின் அறியாத இளவயதுப் பெண்ணொருத்தியுடன் பழகும் போதும் பேசும் போதும் ஏற்படும் வாலிப மனத்தின் உணர்ச்சிகள், மனிதன் தோன்றிய காலந் தொட்டு அவன் அறிந்ததுதான். ஆனால் அப்போதுதான் அதில் ஏதோ புதுமை இருப்பதாக நினைத்துக் கொள்ளும் வாலிப மனம் கிளர்ச்சியடைகிறது. மாயை என்பதற்குச் சரியான உதாரணம் கூற இதை விடச் சிறந்த உணர்வு வேறு இருக்க முடியாது. வாலிப வயதுடைய பெண், அதிலும் அயல் தேசத்து அழகிய பெண். உடையிலும், நடையிலும், பேச்சிலும் புதுமையுடன் எதிரில் தோன்றும் போது, இளவயது வாலிபனின் மனம் அதில் சிக்கித் தவிப்பதில் விந்தை என்ன இருக்கிறது?

முன்பின் பார்த்திராத நங்கை தன்னை நோக்கிப் புன்னகை செய்து வரவேற்றதுமே குலசேகரன் பிரமித்தான். அடுத்து, ''பாண்டிய இளவலின் வருகை நல்வரவாகட்டும்!'' என்று அவள் முகமன் கூறியதோடு, இரு கரங்களையும் குவித்துச் சற்றுக் குனிந்தாள். அவள் கின்னைக் குரலும் கொவ்வை இதழ்களும் கரிய சிறு விழிகளில் நிலவிய மயக்கமும் குலசேகரனை ஒரே தாக்குதலில் வீழ்த்தின.

அவள் தன்னை அறிந்திருந்ததும் சகஜமாகத் தன்னை வரவேற்றதும், அவள் அபார அழகும், காந்தமென இழுத்த பார்வையும் குலசேகரனைக் கிறங்கச் செய்தன. இத்தகைய அழகியையா தனக்கு மனைவியாக்குவதாக பராக்கிரமபாகு கூறினார் என்று எண்ணிய போது புளகாங்கிதமுற்றான்.

அவன் மிரண்ட விழிகளையும், நெற்றியில் பொடிப் பொடியாகத் துளிர்த்த குறுவியர்வையையும் கவனித்த அஞ்சனா, பார்வைக்குப் பெரும் வீரனாகத் தோன்றும் பாண்டிய இளவலுக்கு இன்னும் உலக அனுபவம் அவ்வளவாக இல்லை என்று புரிந்து கொண்டாள். அவன் மனத்தைப் பூரணமாகத் தன் வசப்படுத்திக் கொண்டால் அதை இஷ்டப்படி வளைக்கும் குயவன் கை மண்ணாக ஆக்குவது மிக எளிது என்ற முடிவுக்கு வந்தாள்.

அவனை மயக்கத்திலாழ்த்தக் கூடிய தன் முறுவலை இன்னும் சற்று அதிகமாக விரித்தவள் இடை நெளிய அவனை நெருங்கி வந்தாள்.

''இளவரசர் இப்படி அமரலாமே...'' என்று சந்தனத்தில் கடைந்தெடுத்த தன் கரத்தால் இருக்கையைச் சுட்டிக் காட்டவும் செய்தாள்.

மந்திரத்தில் சிக்கிய பதுமையாக அமர்ந்த குலசேகரனை பராக்கிரமபாகுவின் குரல் சுய நினைவுக்குக் கொண்டு வந்தது.

''நான் உங்களைப் பற்றி ஏற்கெனவே இவளிடம் தெரிவித்திருக்கிறேன். உங்களை



அமைந்து வருவதாகவும் உறுதி கூறியிருக்கிறேன்'' என்றான் பராக்கிரமபாகு.

அவன் குரல் கேட்ட பிறகே தன்னையும் இளவரசியையும் தவிர, பராக்கிரமபாகுவும் இருப்பதை நினைவுபடுத்திக் கொண்ட குல



சேகரன், தன் புத்தியை மெல்ல நிதானத்துக்குக் கொண்டு வந்தான்.



அஞ்சனாதேவி செய்த சமிக்ஞையைப் புரிந்து கொண்ட பராக்கிரமபாகு, ''இளவரசே, சற்று இருங்கள். நான் கீழ்த்தளத்திற்குச் சென்று வருகிறேன்'' என்று கூறியபடியே வெளியே நடந்து கீழ்நோக்கி இறங்கிய படிகளில் இறங்கி மறைந்தான்.

அவன் மறைந்ததும் அறையை விட்டு வெளியே வந்து ஒருமுறை பார்த்தவள் கதவை மூடி விட்டு வந்து அவன் எதிரே இருந்த உயரமான இருக்கையொன்றின் மீது தாவி அமர்ந்து கொண்டாள். கால்களை இலேசாக அசைத்து, அவற்றில் அணிந்திருந்த வெள்ளிச் சதங்கைகளை ஜல் ஜல் என்று ஒலிக்கச் செய்தாள்.

குலசேகரன் சிரமப்பட்டு மீட்ட தன் நிதானத்தை மீண்டும் மெல்ல இழந்து கொண்டிருந்தான்.

கண்களுக்கு மிக அருகில் தெரிந்த அவள் வழவழுத்த கன்னங்களும் செவ்விய நீரோட்டம் மிகுந்த கண்களில் தெரிந்த புன்சிரிப்பும் அவனைச் சுயநினைவை இழக்கச் செய்து கொண்டிருந்தன. கால்கள் அசைவதால் சதங்கை எழுப்பிய ஜல் ஜல் என்ற ஒலி, அவன் இதயத்தின் ஒலியுடன் போட்டியிட்டது. அவள் கெண்டைக் கால்களின் சந்தன நிறம், அவன் இதயத்தைக் கொள்ளையடித்துக் கொண்டிருந்தது.

''இளவரசே...'' அவள் குரல் மென்மையாக ஒலித்தது.

''ம்...'' வெறும் ஒலியாக வந்தது குலசேகரனின் பதில். அவள் அண்மையும் அவளிடமிருந்து கிளம்பிய நறுமணமும் அவன் வார்த்தைகளைத் தடைசெய்திருக்க வேண்டும்.

''மாறவர்மருக்குப் பதிலாக மதுரை அரியணையில் நீங்கள் ஏன் அமரக் கூடாது?''

குலசேகரனை நோக்கி வீசப்பட்ட இந்தக் கேள்வி, அவனைச் சுற்றியிருந்த மாய வலையை ஓரளவிற்கு அறுக்கவே செய்தது.

தந்தை மாறவர்மருக்கு அளித்திருந்த வாக்கும் போருக்கான ஏற்பாடுகள் மும்முரமாக நடைபெற்றுக் கொண்டிருந்த கோட்டையும் அவன் சித்தத்தில் வலம் வந்தன. குழப்பம் நிறைந்த விழிகளை அவள் மீது நிலைக்க விட்ட குலசேகரன், ''என்ன சொல்கிறீர்கள்?'' என்றான்.

''நடக்கக் கூடியதைத்தான் கூறுகிறேன். கோட்டாற்றுப் பாண்டியரை விட நீங்கள் எல்லா வகையிலும் மதுரை அரியணைக்கு ஏற்றவர். உங்களை ஏற்பதில் சோழர்களுக்கு ஆட்சேபணையேதும் இருக்காது. போரும் தவிர்க்கப்படுவதால் மக்கள் மகிழ்வார்கள்.''

மௌனம் சாதித்தான் குலசேகரன். தான் கூறியது அவன் சித்தத்தில் உறைய சற்று அவகாசம் கொடுத்த அஞ்சனாதேவி தொடர்ந்தாள் : ''மாறவர்மரின் எதிர்ப்பைப் பற்றி அதிகம் கவலைப்பட வேண்டாம். அதை நாங்கள் கவனித்துக் கொள்கிறோம்.''

''என் தந்தை அளித்த வாக்கு?''

பதிலுக்கு சிற்றுளியால் செதுக்கியது போல் சிரித்த இளவரசி, ''மாறவர்மர் இருக்கும்' வரையில்தானே அந்த வாக்கு உங்கள் தந்தையைக் கட்டுப்படுத்தும். அவருக்குப் பின் பட்டமேற்க வேண்டியவர் நீங்கள் தானே?'' என்றாள்.

''எனக்கு விளங்கவில்லை.''

''நான் விளங்க வைக்கிறேன்...'' - பராக்கிரமபாகுவின் குரல் பின்னாலிருந்து ஒலித்தது.

''உங்கள் தந்தை கொடுத்த வாக்கை மீறவே வேண்டாம். போர் நன்றாக நடக்கட்டும். ஆனால் போரின் முடிவில் மதுரை அரியணையில் அமரப் போவது நீங்கள்தான். உங்கள் அருகில் பட்டமகிஷியாக அமரப் போவது இந்த அஞ்சனாதேவிதான்'' என்ற பராக்கிரமபாகு, மெல்ல மெல்ல அரியணையின் மீது ஆசையை ஊட்டியபடியே அதை நிறைவேற்ற ஈழத்தின் உதவி எந்த வழிகளில் செயல்படும் என்றும் விளக்க ஆரம்பித்தான்.

தன்னை மன்னனுமாக்கி, இந்த அழகியை மனைவியுமாக்கி, நாடாள வைப்பதாகக் கூறிய பராக்கிரமபாகுவைக் கண் கொட்டாமல் நோக்கினான் குலசேகர பாண்டியன்.

ஈழத்து உறவில் குலசேகரனுக்கிருந்த ஆரம்ப கால வெறுப்பை விருப்பாக மாற்றிய பராக்கிரமபாகு பாண்டிய நாட்டின்

## அருள்வாக்கு

நாமே நேரே ஈச்வரனிடம் ப்ரார்த்தித்துக் கொண்டால், அவன் நமக்குச் செய்கிற அநுக்ரஹத்தை விட ஜாஸ்தியாகவே நாம் அவனை ப்ரார்த்திக்காமல் குருவையே ப்ரார்த்திக்கும் போது, அந்த குருவின் மூலம் பெற்று விடலாம்! எப்படி என்கிறீர்களா? நாமே நேராக ஈச்வரனிடம் ப்ரார்த்திக்கிறோம் என்றால், நம்முடைய ப்ரார்த்தனா சக்தி எவ்வளவு? ரொம்பக் கொஞ்சந்தான். மனஸின் ஆழத்திலிருந்து தீவிரமாகப் பிரார்த்திக்கவே நமக்குத் தெரியாது. அதோடு நமக்கேதான் நாம் பிரார்த்தித்துக் கொள்கிறோம். நம்முடைய சொந்த நலனையேதான் ஈச்வரனிடம் வேண்டுகிறோம். இதற்கு அவன் செவி சாய்க்க மாட்டானென்றில்லை. ஆனாலும் நம்முடைய அல்ப ப்ரார்த்தனா பலத்தில் நமக்காகவே நாம் வேண்டிக் கொள்வதற்கு அவன் பெரிசாக எப்படி ஒரு பலன் தருவான்? ஆனால் நாம் குருவே எல்லாம் என்று இருந்து விட்டால், 'அவர் இந்தக் குழந்தைக்காக நாம்தான் ப்ரார்த்திக்கணும்' என்று ஈச்வரனிடம் நம் சார்பில் ப்ரார்த்தனை செய்வார். அவர் நம்மைப் போல ஈச்வரனை நேரில் தெரிந்து கொள்ளாதவரில்லை. அவருடைய ப்ரார்த்தனா சக்தி மிகவும் பலமானது. நமக்கு



எட்டாக்கையனாக இருக்கும் ஈச்வரனுக்கு ஸமீபத்திலேயே இருப்பவர் அவர். தன்னுடைய வலுவாய்ந்த பிரார்த்தனா சக்தியோடு அவர் நமக்காக அவனிடம் வேண்டிக் கொண்டு, எடுத்துச் சொல்லி கேட்டுக் கொள்கிற போது அவன் அதை நிச்சயம் கேட்கத் தானே கேட்பான்? நாம் எக்கேடு கெட்டுப் போனாலும் குருவுக்கு ஒரு நஷ்டமும் இல்லை. அப்படியிருந்தும் அவர் பரம கருணையோடு நமக்கு உபதேசம் பண்ணி, நம் அழுக்கைப் போக்குவதற்காகப் பாடு பட்டு, ஸ்வய நலமே கொஞ்சங்கூடக் கலக்காமல் நம் பொருட்டாகவே ஈச்வரனிடம் வேண்டிக் கொள்கிறாரென்றால் அதற்கு வால்யூ ரொம்ப ஜாஸ்திதானே? நம்முடைய ஸாதனை, ப்ரார்த்தனை ஆகியவற்றுக்காக ஈச்வரன் ஏதோ கால் பங்கு, வீசம் பங்கு அநுக்ரஹம் பண்ணுவானென்றால், நமக்காக குரு ப்ரார்த்திக்கும் போது முழுப் பங்கும் பண்ணி விடுவான். லௌகிகத்திலேயே பார்க்கிறோமல்லவோ? கவர்னர், மந்த்ரி மாதிரி ஒருவரால் நமக்கு ஒரு கார்யம் நடக்குமென்றால் நாமே அவரிடம் போய் நிற்க முடியுமா? நமக்குப் பேட்டி கிடைக்குமா? அவரிடம் சாய்கால் உள்ளவராக இருக்கிற நமக்குத் தெரிந்த ஒருவரிடம் நாம் போய் முறையிட்டாலே போதுமானதாக இருக்கிறதல்லவா? இவருடைய சிபாரிசுக்காகவே கவர்னர் நம்மைப் பார்க்கக்கூடப் பார்க்காமல் நமக்கு வேண்டிய கார்யம் ஆவதற்கு உத்தரவு போட்டு விடுகிறாரல்லவா?

ஈச்வரனிடம் நாம் போக வேண்டாம். நாம் போய் நடத்திக் கொள்வதை விட இன்னம் நூறு பங்கு நன்றாக நமக்கு அவனிடம் சொல்லி நடத்திக் கொடுப்பதற்காக இருக்கிற குருவிடம் போய் அவரிடமே முறையிட்டு விட்டால் போதும்.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

தலையெழுத்தையே மாற்றியமைக்க வல்ல தன் திட்டத்தைக் கூற ஆரம்பித்தான்.

அதே நேரத்தில் கொங்குப் பாண்டியனின் கோட்டையை நோக்கி மாறவர்மனும் மார்த்தாண்டனும் எந்தவித அறிவிப்புமின்றி வந்து கொண்டிருந்தனர்.

நிதானமென்பதைச் சாதாரணமாகவே அறியாத மாறவர்மன், ஈழத்தில் தான் அடைந்த ஏமாற்றத்தால் மேலும் பதற்றமடைந்திருந்தான். நம்பிக்கையை அதிகம் ஊட்டாத பராக்கிரமபாகுவின் பேச்சு; சூறாவளியாலும் மழையாலும் தாமதப்பட்ட படை திரட்டும் முயற்சி ஆகியன அவனை நிலைதடுமாறச் செய்திருந்தன. எதிரே நின்ற மாடத்தேவன் கொண்டு வந்த செய்தியோ அவன் நிதானத்தைச் சுத்தமாக இழக்கச் செய்திருந்தது.

''நீ கூறுவது உண்மைதானா?'' எதிரில் நின்றவனை இரண்டாவது முறையாகக் கேட்டான் மாறவர்மன்.

''ஆம் இளவரசே. நானே என் கண்களால் கண்டதைத்தான் கூறுகிறேன்.''

''என்ன கண்டாய் நீ?''

''ஈழத்து இளவரசர் தற்போது கொங்குப் பாண்டியர் அரண்மனையில் இருப்பதைப் பார்த்தேன். அவர்கள் பேசியதை முக்கால்வாசி கேட்டும் வந்தேன்.''

''என்ன பேசினார்கள்?''

''குலசேகர பாண்டியரை மதுரை அரியணையில் அமர்த்துவது பற்றியும் அவருக்கு ஈழத்து இளவரசியை மணமுடிப்பது பற்றியும்.''

''மன்னர் என்ன மறுமொழி தந்தார்?''

''அவர்கள் ஆலோசனைகளை ஏற்க இயலாது என்று மறுத்து விட்டார்.''

மாறவர்மனுக்கு இந்த பதில் அமுதமாக இருந்தது. ஆனால் பராக்கிரமபாகுவின் செயல் அவன் சித்தத்தில் கிளப்பிய புயல் பலமாக வீசவே, மார்த்தாண்டவர்மனுக்குச் செய்தியனுப்பியவன் கைகளைப் பிசைந்தபடி உலவத் தொடங்கினான்.

மூலிகைகள் நிறைந்த குன்றுகளில் பாய்ந்து தென் பாண்டிச் சீமையை வளப்படுத்திய தாமிரபரணியில் தவழ்ந்து வந்த காற்று, பலகணி வழியே குளிர்ந்து வீசினாலும் அது எந்த வகையிலும் அவன் மனத்துக்குச் சாந்தி அளிப்பதாகத் தெரியவில்லை. அறைக்குள்ளேயே உலவியவன் நின்று, சாளரத்துக்கு வெளியே நோக்கினான்.

தாமிரபரணியின் முகத்துவாரத்தில் கொற்கைத் துறைமுகத்திலும் சுற்றியிருந்த பகுதிகளிலும் ஏராளமாகக் கிடைத்த முத்துக்கள் பாண்டிய நாட்டின் செல்வத்தை உயர்த்தியதாலும், பல நாட்டவரும் வாணிபத்திற்காகத் தமது கலங்களை நங்கூரம் பாய்ச்ச இயற்கை அதிக வசதி செய்து கொடுத்திருந்ததாலும் கொற்கையின் பாதுகாப்பை எப்போதும் குறைவின்றி கவனித்த பாண்டிய மன்னர்கள், அந்தக் கோட்டையைப் பலத்த காவலுடன் வைத்திருந்தனர். கலங்களிலி

ருந்து சரக்குகளை இறக்கிய மாலுமிகள் படகுகளில் பொதிகளுடன் கரையை நோக்கி விரைந்து கொண்டிருந்தனர்.

கங்கச் சாவடியில் வரிசையாக நின்றிருந்த பல நாட்டவரும் விரைந்து முன் செல்வதற்காகப் போட்ட கூச்சல்களும், பொதிகளைச் சுமந்த அடிமைகள் அவற்றை இறக்கவும் ஏற்றவும் போட்ட கூச்சல்களும், வெளியே நின்ற வண்டிகளில் பூட்டப்பட்டிருந்த காளைகள் கொடுத்த குரல்களும், அவற்றின் கழுத்தில் கட்டியிருந்த மணிகளின் ஒலிகளும், பல்வேறு நாட்டவரும் பேசிய மொழிகளின் கதம்ப ஒலிகளும் நிறைந்து, அது எத்தனை முக்கியத் துறை முகம் என்பதை நிரூபித்துக் கொண்டிருந்தன.

கோட்டையை ஒட்டி ஆற்றின் கரையோரமாக நீண்டிருந்த மதில்கள் அகலமாகவும் கீழே நிறைந்திருந்த ஆயுத அறைகளாலும் மேலே சதா உலவிக் கொண்டிருந்த வீரர்களாலும் பாதுகாப்புடன் இருந்தன. நடக்கவிருக்கும் போரில் தாக்கப்படலாமென்று எதிர்பார்த்ததால் மாடங்களில் எரியம்புகளை எடுத்து வீசக்கூடிய யந்திரங்கள் நிறுவப்பட்டு, அருகே அவற்றை இயக்கும் யவன வீரர்களும் நின்றிருந்தனர்.

தனது கோட்டையையும் அதன் பாதுகாப்பு ஏற்பாடுகளையும் பார்த்தபடி நின்றிருந்த மாறவர்மனது மனம் சற்று தளர்ச்சி நீங்கி திடம் பெற்றதால் அவன் முகத்தில் நிலவிய குழப்பம் கூடச் சற்று அகன்றது.

வேகமாக மாறவர்மனது அறையில் நுழைந்த மார்த்தாண்டவர்மன், மாறவர்மனிடம் குழப்பத்தையும், உணர்ச்சிவசப்பட்ட இரைச்சலையும் எதிர்பார்த்து வந்ததால் ஏமாந்தே போனான். மாறவர்மன் முகத்தில் அமைதி நிலவிக் கொண்டிருந்தாலும் அவன் முகம் இன்னும் லேசாகச் சிவந்து காண்பதையும், மூலையில் ஒற்றன் ஒருவன் நிற்பதையும் கண்ட மார்த்தாண்டவர்மன், ஒற்றன் மாடத்தேவனை அழைத்து வினவினான். மாடத்தேவன் கூறிய விவரங்களைக் கேட்ட மார்த்தாண்டன் முகத்தில் சிந்தனை படர்ந்தது.

''மாறவர்மா! ஜெகவீர பாண்டியர் கொடுத்த வாக்கை என்றும் மீற மாட்டார் என்பதை அறிய மாட்டாயா நீ?'' என்றான் மார்த்தாண்டவர்மன்.

''ஆனால் அவர் இந்தப் போரில் கலந்து கொள்ள முதலில் காட்டிய தயக்கத்தையும் மறந்து விட்டீர்கள்'' என்றான் மாறவர்மன்.

''இருக்கலாம் மாறவர்மா, அவர் முடிவெடுப்பதில் தாமதம் காட்டினாலும் முடிவெடுத்தபின் அதிலிருந்து மாறாத திடசித்தம் கொண்டவர்தாம். மாடத்தேவன் கூறுவதும் அதைத்தானே நிரூபிக்கிறது மாறவர்மா?''

ஆனாலும் மாறவர்மனின் சந்தேகம் தீரவில்லை. ''அரியணை கிட்டும் என்றால் எப்படிப்பட்ட திடசித்தமும் மாறக் கூடுமல்லவா?'' என்றான்.

''மாறவர்மா, இந்த சந்தேகப் புத்தியை விடு. இதுவரை கொங்கு மன்னருக்கு சோழருடன் நேரடிப் பகை இல்லாமலிருக்கலாம். ஆனால் அவர் நம்முடன் சேர்ந்து போருக்கு ஆயத்தமாவதை விக்கிரமன் அறியாமலிருப்பானென்று எண்ணுகிறாயா? அவன் ஒற்றர்களின் திறமை நீ அறியாததா? நீ முன்னிரவில் அம்மங்கையைக் கடத்தி வந்ததை இரண்டாம் ஜாமத்திற்குள் கண்டறிந்து விடவில்லையா?''

மாறவர்மனின் மனக் கண்களில் அந்த நிகழ்ச்சி மீண்டும் நிழலாடியது. மேலை மங்கலத் தோப்பில் உப்பரிகையில் சாய்ந்து நின்ற அந்த வீரனின் முகம் கண்ணெதிரில் எழுந்தது. தான் அம்மங்கையைக் கடத்தி வந்ததை அத்தனை துரிதமாக அறிந்து கொண்டு வந்து அனாயாசமாகப் பாண்டிய வீரர்களை அவன் சமாளித்த விதமும், மின்னலைப் போல் பளிச்சிட்ட அவன் வாள் வீச்சும் நினைவுக்கு வரவே, அந்த நீண்ட வாள் பாய்ந்த தனது தோளை மெல்லத் தடவிக் கொண்டான்.

மாறவர்மன் முகம் போன போக்கையும் அவன் விரல்கள் வாள் வடுவைத் தடவியதையும் கண்ட மார்த்தாண்டன், ''மாறவர்மா, உன்னை வருத்த வேண்டும் என்பது என் நோக்கமல்ல. நமது ஒவ்வொரு நடவடிக்கையையும் விக்கிரமன் அறிவான். நாம் பெறும் வாழ்வும் தாழ்வும்தான் கொங்கு மன்னரும் அடைய முடியும். பழைய உறவை இனி மதிக்க மாட்டான் சோழன்'' என்றான்.

மார்த்தாண்டனது வாதம் சரியென்றே தோன்றியது மாறவர்மனுக்கு. சற்று சிந்தித்தவன், ''நாம் நேரில் சென்று கொங்கு மன்னரைக் கண்டு பேசி வருவது நல்லது என்று எண்ணுகிறேன்'' என்றான்.

''நமக்கு வேறு பணிகள் காத்திருக்கின்றன, மாறவர்மா! சேரலாதர் படைகள் மலைக் கணவாயில் காத்திருக்கின்றன. உன் மாமன் உத்தமபாளைய ருத்திர பாண்டியருக்குச் செய்தி அறிவிக்க வேண்டும். கங்காதரருக்கும் ஓலையனுப்ப வேண்டும். மந்திராலோசனைக்கு நாள் குறிக்க வேண்டும்'' என்று மார்த்தாண்டன் அடுக்கிக் கொண்டே போனான்.

அனைத்தையும் ஒப்புக் கொண்ட மாறவர்மன், அதற்கு முன் கொங்கு மன்னரைக் காண்பதில் பிடிவாதமாக நின்றான்.

இறுதியில் அவன் பிடிவாதமே வென்றது.

காவலுக்கு ஓரிரு வீரர்களை மட்டும் அழைத்துக் கொண்ட மாறவர்மன், அப்பொழுதே கொங்கு மன்னன் கோட்டையை நோக்கிக் கிளம்பினான். மார்த்தாண்டனும் உடன் கிளம்பினான். தங்கள் வரவை முன் கூட்டியே அறிவிக்க வேண்டாமென்று தடுத்தும் விட்டான் மாறவர்மன்.

(தொடரும்)

**வட்டமேஜை**

# "எப்பகுதிக்கும் பொருந்தும் குறைகள்!"

♦ "தோல்வி ஊர்வலங்கள் நடத்தத் தயாரா?" என்ற இவ்வார தலையங்கம், அ.தி.மு.க.வினர்களுக்குச் சாதகமாக வந்திருக்கும் சென்னை உயர் நீதிமன்றத் தீர்ப்பின் ஒரு பகுதியைச் சாடி பத்தில் வெற்றி விழாவாகக் கொண்டாடிய "சிறுபிள்ளைத்தனத்தினை" மிக அருமையாகச் சாடியிருந்தது. அதே போன்று, மத்திய அமைச்சர் ரங்கராஜன் குமாரமங்கலத்தின் ஆதாரமிக்க குற்றச்சாட்டுகளுக்கு, அ.தி.மு.க. அரசு உரிய முறையில் விளக்கம் தராமல், அந்தக் குற்றச்சாட்டுகளுக்கு அ.தி.மு.க.வினரின் பதிலடி எவ்வளவு அநாகரீகமாக இருக்கும் என்ற உண்மையையும் எடுத்துரைத்திருந்தது அருமை. ஜெயலலிதாவும் அவரது அ.தி.மு.க. சகாக்களும் ஒருமுறைக்குப் பலமுறை படித்துப் பார்த்து, இனியாவது அவர்களைத் திருத்திக் கொள்வது நல்லது.

தோட்டக்குறிச்சி, இரா. வளையாபதி.

♦ அட்டையில் நம் விளையாட்டு வீரர்களின் கள்ளங்கபடமற்ற சிரிப்பு, எங்கள் மனத்தைக் கொள்ளை கொண்டது.

பவித்திரமாணிக்கம், ஆர். பாஸ்கரன்.

♦ ஒவ்வொருவருடைய வெற்றிக்கும் பின்னால் ஒருவர் இருப்பது போல், நமது இந்திய கிரிக்கெட் அணியின் வெற்றிக்குப் பின்னால் ஒரு சித்தார்த்தன். இவரின் சீரிய பணியால் பல வீரர்களின் உடல் வலியைப் போக்குவது பாராட்டுக்குரியது. நமது கிரிக்கெட் அணியின் வெற்றிக்குப் பதினோரு பேர்தான் காரணம் என்று இருந்த எனக்கு, இந்த சித்தார்த்தன் மூலம் பன்னிரெண்டு பேர் உள்ளனர் என்று தெரிந்து கொண்டேன்.

சிவகங்கை, சி. ஸ்ரீகாந்த்.

♦ மறைமலைநகர்வாசிகளின் குறைகளைப் படிக்கிற போது, புதிதாக அதில் ஒன்றுமில்லை. அதற்கான எம்.எம்.டி.ஏ.வின் பதில்களும் அப்படியே. இந்தக் குறைகள் அனைத்தும், தமிழ்நாட்டின் எப்பகுதிக்கும் பொருந்தும். வரியாகக் கைப் பணத்தை அரசிடம் பல வழிகளில் கொடுத்து விட்டு அல்லல்படுவதற்கு, மக்களே நேரிடையாகச் செலவு செய்யும் ஒரு புரட்சி ஏற்பட்டால் ஒழிய, இக் குறைகளுக்கு விடிவே இல்லை என்று தோன்றுகிறது.

திருச்சி - 9, கண்ணம்மா இராமசாமி.

♦ "மெட்ரோ சாலையின் மறுபக்கம்" பார்வதி மாமியை நினைத்தால் ஒரு பக்கம் பாவமாக இருக்கிறது. மறுபக்கம் பார்த்தால் அடக்க முடியாமல் சிரிப்பு வருகிறது. கதையைப் படித்து முடிக்கும் வரையிலும், அதற்குப் பிறகும் சிரித்துக் கொண்டேதான் இருக்கிறேன், கதையை நினைத்து நினைத்து.

வேட்டைக்காரன்புதூர், பி. ஜெயப்பிரகாஷ்.

♦ 'ஊர் சிரிக்கும் போது' சிறுகதை யதார்த்தமாக இருந்தது. நடையில் புதிய துள்ளல் தெரிகிறது. பாராட்டுக்கள்.

திருவாரூர், கோ. ஜானகிராமன்.

♦ ராகவனின் "முதல் இன்னிங்ஸ்" சிறுகதை ஓர் அற்புதமான மலரும் நினைவு! என்ன ஓர் அருமையான நடை! நடை நெடுகிலும் நகைச்சுவை இழையோடுகிறது!

திருவண்ணாதபுரம், தி.க. பாலசுப்பிரமணியன்.

♦ ஆத்மா பட விமர்சனம் கனகச்சிதம்! ஆனால் ஒரு விஷயம் விட்டு விட்டீர்கள்! ஆங்கில நாவலாசிரியர் 'இர்விங் வாலஸ்' எழுதிய "த பிளாக் கின்" - நாவலின் அப்பட்ட ஜெராக்ஸ் பிரதிதான் ஆத்மா!

சென்னை - 112, மகேந்திரநாத் ராவ்.

♦ 'இது ஒரு தனி உலகம்' கட்டுரை கண்டேன். ஒருமுறை எலக்ட்ரிக் ட்ரெயினில் சென்று அனைவரிடமும் பழகிய எஃபெக்ட் இருந்தது. என் போன்ற வெளியூர்வாசிகளுக்கு நேரடி அனுபவம் கிடைக்காவிட்டாலும் அதன் சுவை சிறிது கூட குறையாமல் கட்டுரையைப் படிக்கும் போதே கிடைத்து விட்டது.

மருங்கூர், பால. கிருஷ்ணமூர்த்தி.

♦ பெண்கள் வண்டியில் ரெகுலராக லலிதா சகஸ்ரநாமம், சௌந்தர்யலஹரி மற்றும் பக்திப் பாடல்கள் பாடிக் கொண்டு செல்வது எப்படி நம் கண் நிருபருக்குத் தெரியாமல் போயிற்று என்று ஆச்சரியமாக உள்ளது.

சென்னை - 91, ஜி. சீனிவாசன்

♦ நித்யா என்னும் 'பனிப்பாறை' உடைந்து, உருகி, பிரசன்னா என்ற நதியுடன் கலந்தது கண்டு மனம் குதூகலமடைகிறது. ஆபஸ்தம்பனுக்கும், ஓவியர் ஸ்யாமுக்கும் பாராட்டுக்கள்.

திருமுல்லைவாயில், ப. இராமபிரசாத்.

♦ வாழ்க்கையில் ஓர் ஆணுக்கு எதிராக எதிர் நீச்சல் போட்டு வெற்றி பெற்ற நித்யாவைப் போன்ற பெண்களைப் பார்ப்பது அரிது. அருமையான தொடர்.

பரமக்குடி, என். ஆறுமுகம்.

♦ நேர்மையாகத் தொழில் செய்பவர்களுக்கு எப்போதுமே சோதனைதான். அதிலும் பெண்ணாக இருந்து விட்டால் பிரச்னைகள் இன்னும் அதிகம். ஆனால் மலை போல் வரும் சோதனைகளும் தன்னம்பிக்கையோடு செயல்படும் போது பனிபோல் நீங்கி விடும் என்பதைப் 'பனிப்பாறை' உணரவைக்கிறது.

தஞ்சாவூர் - 8, வெ. முருகானந்தம்.

# திருஷ்டி

ரமேஷ்வர்மா

அலுவலகத்தில் என் செக்‌ஷனுக்குப் புதிய மேலதிகாரியாக ராமகிருஷ்ணன் மாற்றலாகி வந்திருந்தார். குடும்பம் என்று அவருக்குப் பெரிதாக ஒன்றுமில்லை. அவர், அவர் மனைவி அவ்வளவுதான். இரு மணமாகி, ஐந்து வருடங்கள் கழிந்தும், ஏனோ, குழந்தையில்லை.

என் செக்‌ஷன், ஒரு விநோதமான செக்‌ஷன். ரமா, டைப் அடித்து, பேப்பர்களைத் தந்தால்தான், உமா கொட்டேஷன்களை நோட் அவுட் பண்ண முடியும். உமா முடித்துத் தந்தால், கிருஷ்ணன், வெரிஃபிகேஷன். வெரிஃபிகேஷன் முடிந்தால், பைல் என்னிடம் வரும். இப்படியாக வேலைகள் சங்கிலியாக இருக்கும் போது அவரவர் ஒற்றுமையாக, கடமையைச் செய்யாமல், இழுத்தடித்து, இழுத்தடித்து... அப்பா.. நரக வேதனைதான்.

ஆனால் ஒரு விஷயத்தில் இவர்கள் அனைவரும் ஒற்றுமையாக இருந்தது. ஆச்சரியமாக இருந்தது. பதினாறு பேரும் போட்டி போட்டுக் கொண்டு, அதே சமயத்தில் ஒற்றுமையாக ராமகிருஷ்ணனுக்கு விருந்து மேல் விருந்து வைத்துத் திணறடித்து விட்டார்கள். இதற்கு ''நாகரிகமான காக்கா ஆபரேஷன்'' என்று பெயர் வைக்கும் அளவுக்கு மும்முரமாக இருந்தது. அவரும் அவர் மனைவி சகிதம், வந்து விருந்துகளை அமர்க்களப்படுத்திக் கொண்டிருந்தார்.

சில பேர், வீட்டுக்கழைத்து, சில பேர் ஹோட்டலில் வைத்து, இப்படியாக நடக்க, நான் மட்டும் அவரை அழைக்கவில்லை.

காரணம், என் மனைவிக்கு ஒரு வாரமாக உடல்நிலை சரியில்லை. என்னையும், என் இரண்டு குழந்தைகளையுமே அவளால் சரிவர கவனிக்க முடியவில்லை. பாவம், அவள் கஷ்டம் தெரிந்துதான், ஒரு வாரமாக நான் சமைத்துக் கொண்டிருக்கிறேன். விஷயம் இப்படி இருக்கும் போது, ராமகிருஷ்ணன் அழைப்பதாக பியூன் வந்து சொன்னான்.

இன்னமும், முடிக்காத ஃபைலை டேபிளிலிருந்து எடுத்துக் கொண்டு, அவர் அறையை அடைந்து -

''ஸார்...''

''ஓ... வாங்க... என்னாச்சு...?''

''ஸாரி ஸார். இன்னும் ஒன் அவர்ல, இந்த ஃபைலை முடிச்சு, உங்ககிட்ட கொண்டு...'' நான் சொல்லிக் கொண்டே போக, அவர் சிரித்தார். தொடர்ந்து -



''மிஸ்டர் ரமேஷ், நான் உங்ககிட்ட வேலையைப் பத்தியே கேட்கலை. நம்ம செக்‌ஷன் ஸ்டாப் எல்லோரும் அவங்க அவங்க அன்பைக் காட்டி, என்னைத் திணறடிச்சுட்டாங்க. ஆனா நீங்க என்னடான்னா... என் மேல உங்களுக்கு என்ன கோவம்னு கேட்கத்தான் வரச் சொன்னேன்.''

''இல்லை சார், கோவம் லாம் ஒண்ணுமில்லை சார், என் வொய்ஃப் 'சிக்'ல படுத்துட்டாங்க. இப்ப பரவாயில்லை; இன்னிக்கு சாயந்திரம் நானே உங்களைக் கூப்பிடலாம்னு இருந்தேன்...'' என்று பொய் சொல்லி, அசடு வழிய நின்றேன்.

''இன்னிக்குச் சாயந்திரமா? முடியாது ரமேஷ். நான் மிஸ்டர் கிருஷ்ணன் வீட்டுக்குப் போறேன். நாளைக்கு நைட் உங்க வீட்டுல வைச்சுக்கலாம். ஏன்னா, நாளைக்கு ஹாலிடே, நான் மனைவியோட ஷாப்பிங் போகணும். திரும்பவே ஈவினிங் ஆயிடும். நைட் உங்க வீட்டுக்கு வரேன். ஆமா, உங்களுக்குக் குழந்தைங்க இருக்கா?''

''ரெண்டு குழந்தைங்க இருக்கு சார். மூத்தவ விஜி ஆறாவது, சின்னவன் கஜி, மூணாவது படிக்கிறாங்க சார்.''

''ஓகே! நான் சரியா ஏழு மணிக்கு வந்திடறேன், குழந்தைங்களோட சாப்பிடலாம் என்ன!''

''சரி சார்,'' என்று வெளியே வந்த எனக்குத் திக்கென்றிருந்தது. என் மனைவி பிருந்தாவுக்கு, உடல்நிலை கொஞ்சம் தேவலாம் தான். ஆனால், அவளைச் சமாதானப் படுத்தி, விருந்து தயாரித்து...

இரவு என் மனைவியிடம் விஷயத்தைச் சொன்ன போது, முறைத்தாள்.

''என்ன விளையாடறீங்களா, நாலு நாளா அங்கேயும், இங்கேயும், நகர முடியாம நான் படுற கஷ்டம் எனக்குத்தானே தெரியும்,'' என்றாள்.

''பிருந்து, ப்ளீஸ். நிலைமை தெரிஞ்சு தான், நானா அவரைக் கூப்பிடலை. ஆனா, மனுஷன் அவரே, கூப்பிட்டு, சாப்பிட தேதியை வாங்கிக்கிட்டுத்தான் விட்டார்.''

''நல்லா கெடந்து அலையறார் மனுஷன். இங்க பாருங்க, என்னால இப்ப இருக்கிற நிலைமைக்கு, ரொம்பத் தடபுடலா எல்லாம் பண்ண முடியாது. சிம்பிளாத்தான் முடியும்.''

''அது போதும் பிருந்தா, சிம்பிள் அண்ட் சூப்பர்ப்.''

''இதுல ஒண்ணும் குறைச்சல் இல்லே. ஆமா, எத்தனை பேர் வர்றாங்க?''

''இரண்டே பேர்தான், அவர் அவரோட வொய்ஃப்.''

''இவ்வளவுதானா? ப்பூ, புதுக் கல்யாண ஜோடியா?''

''இல்லை, இல்லை, கல்யாணமாகி அஞ்சு வருஷம் ஆகப் போகுதாம்.''

''குழந்தைங்க இவங்ககிட்ட இல்லையா? ஊர்லேயே படிக்குதுங்களா?''

''இல்லை பிருந்தா, அவங்களுக்குக் குழந்தைங்க கிடையாது.''

''அப்படீன்னா?''

''அந்த பாக்கியமே இதுவரைக்கும் இல்லே.'' இதைச் சொல்ல எனக்கே என்னவோ போலிருந்தது.

''அய்யய்யோ,'' என்று திகைத்துப் போன பிருந்தா, கட்டிலில், தூங்கிக் கொண்டிருந்த விஜியையும், சுஜியையும் பார்த்தாள். சிறிது நேரம் யோசித்தவள் போலிருந்தவள், ''இங்க பாருங்க, இப்ப நான் ஒண்ணு சொன்னா கேட்பீங்களா?''

விருந்துக்கு, ஒப்புக் கொள்வாளோ, மாட்டாளோ என்றிருந்த எனக்கு, அவள் 'டக்'கென ஒப்புக் கொண்டதில், அவளது எந்த கண்டிஷனையும் ஏற்கலாம் போலிருக்கவே, ''கேட்கிறேன் சொல்லு,'' என்றேன்.

''அவங்களுக்கோ, அஞ்சு வருஷமாகியும் குழந்தையே இல்லை, நமக்கு மணி மணியா இரண்டு குழந்தைங்க. குழந்தையே இல்லாத அந்தம்மாவோ, அந்தாளோ ஆத்தாமையில, ஒரு பார்வை பார்த்தாக் கூட போதும். போச்சு, நம்ம குழந்தைங்களோட எதிர்காலம், யார் கண்டா? நம்ம குழந்தைங்களைப் பாக்கறச்சே, நமக்கு இல்லையேன்னு அப்படியே உள்ளுக்குள்ளே எரிஞ்சாலும் எரியும், அதனால...''



## ஜில்லு ராஜு













''அதனால...''

''ஆறு மணிக்குக் குழந்தைங்களைக் கொண்டு போய், அடுத்த தெருவுல இருக்கிற, உங்க தம்பி வீட்ல விட்டுட்டு வந்துடுங்க. அவங்க வந்துட்டுப் போன பின்னாடி, கூட்டிக்கிட்டு வரலாம், என்ன?'' என்றாள் பிருந்தா.

''ஏன் பிருந்தா இப்படியொரு மூடநம்பிக்கை?''

''உங்களுக்கு ஒண்ணும் புரியாது. நான் சொன்னபடி செஞ்சிடுங்க, அப்பத்தான் அவங்களுக்கு நம்ம வீட்டுல சாப்பாடு,'' என்று சொல்லி விட்டுப் படுத்து விட்டாள்.

மறுநாள்.

மாலை ஏழு மணிக்குச் சரியாக, என் வீட்டின் வாசலில், ஸ்கூட்டரில் வந்திறங்கினார் ராமகிருஷ்ணன், தம் மனைவி சகிதம்.

என் மனைவி, பிருந்தா, முகமெல்லாம் மலர்ந்து, அவர்களை வரவேற்று உள்ளே அழைத்துப் போனாள்.

ஹாலில் அமர்ந்தார்கள். என் மனைவி, உள்ளே சென்று, தக்காளி சூப் எடுத்து வந்து, அவர்களுக்கும் எனக்கும் கொடுத்தாள்.

''தாங்க்ஸ், சொல்லிப் பெற்றுக் கொண்ட ராமகிருஷ்ணன், ''உங்க பேர் என்ன?'' என்றார் என் மனைவியிடம்.

''பிருந்தா'', என்றாள் சற்றே வெட்கப்பட்டு.

''உக்காருங்க.... இது என் வொய்ஃப் பிரபா. ஆமா, உங்களுக்கு உடம்பு சரியில்லைன்னு சொன்னாரே உங்க ஹஸ்பெண்ட், இப்ப எப்படிம்மா இருக்கு?'' ஆதரவாக, நினைவில் கொண்டு விசாரித்தவரை, எனக்கும் பிடித்து விட்டது.

''இப்ப பரவாயில்லைங்க,'' என்றாள் பிருந்தா.

''எங்க உங்க குழந்தைங்களைக் காணோம்,'' என்று பிரபா கேட்க, தொடர்ந்து, ராமகிருஷ்ணனும் கேட்டார்.

''ஸார், அடுத்த தெருவுல என் தம்பி இருக்கான் சார். எங்கம்மா ஊர்லருந்து வந்துருக்காங்க. அதான் குழந்தைங்க பாட்டியைப் பார்க்கிறதுக்கு...'' கச்சிதமாகப் பொய்யைத் தயாரித்தேன்.

''ஆல்ரைட்'', என்றவர் முகம் பிரகாசத்தை இழந்ததை, பிரபாவின் அலைபாயும் கண்கள் 'டக்'கென நின்றதை என்னால் கவனிக்க முடிந்தது.

''ஸார், வாங்க சாப்பிடலாம்'' என்று அவர்களை அழைத்துச் சென்று, டைனிங் டேபிளில் அமரவைத்து, நானும் அமர்ந்தேன்.

அப்போது -

வாசலில் நிழலாடியது. விஜியும், சுஜியும்தான் திரும்பி வந்தனர்.

என் மனைவி முகத்தில் இன்னதென்று சொல்ல முடியாத ஓர் உணர்ச்சி பரவி நின்ற

தைக் கண்டேன்.

அவசரமாக எழுந்து வந்து, "என்ன... என்ன ஆச்சு...?" என்றேன் பரபரப்பாய்.

ராமகிருஷ்ணனும் அவர் மனைவியும் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

"இனிமே எங்களைச் சித்தப்பா வீட்டுக்கு அனுப்பாதே. நான் போக மாட்டேன்" என்றாள் விஜி. பையனும் தலையசைப்பின் மூலம் ஒத்து ஊதினான்.

"என்ன ஆச்சு?"

"சித்தப்பாவுக்கு இன்னிக்கு ஏதோ போனஸ் வந்ததாம். அவங்க பொண்ணு மீனாவுக்கு தங்க செயின் ஒன்னு வாங்கி வந்திருக்காரு. நாங்க மூணு பேரும் விளையாடிக்கிட்டிருந்த போது, அவர் மீனாவைக் கூப்பிட்டுக் கழுத்திலே போட்டு விட்டார்.."

"அதனால என்னம்மா?"

"நான் கூட சொன்னேன், மீனா, ரொம்ப அழகா இருக்குடின்னு. அப்போ சித்தி என்ன பண்ணாங்க தெரியுமா?"

ராமகிருஷ்ணன் ஆர்வத்தோடு பார்த்தார். எனக்கு உடம்பு தெளிந்தது. என் மனைவி விடாமல் கேட்டாள்.

"என்ன நடந்தது?"

"சித்தப்பாவைத் தனியாக் கூட்டிட்டுப் போயி கண்டபடி திட்டினாங்க. எங்க முன்னாடி மீனாவுக்குத் தங்க செயின் போட்டு விட்டா, எங்களுக்கு இல்லேங்கிறதால அவளைப் பார்த்து எங்களுக்குப் பொறாமையா இருக்குமாம். கண் வெச்சிடுவோமாம். திருஷ்டி பட்டுடுமாம்..."

விஜி அழத் தொடங்கினாள்.

"நாங்க ஒன்னும் அது மாதிரி இல்லைன்னு சத்தமாக் கத்திட்டு ஓடி வந்துட்டோம்."

சூழ்நிலை மிகவும் இறுக்கமாகிக் கொண்டிருந்தது. ராமகிருஷ்ணன் மெல்லக் கலைத்தார்.

"ஹலோ சில்ரன்!"

சாக்லேட்டுகளும், பிஸ்கட்டுகளுமாக என் குழந்தைகளின் பாக்கெட்டும் வாயும் நிரம்பின.

"நைஸ் கிட்ஸ்! வாங்க சாப்பிடலாம்..." என்று அவர்களையும் அருகில் உட்கார்த்தி வைத்துச் சாப்பிட்டார்.

கொஞ்ச நேரம் குழந்தைகளுடன் விளையாடி விட்டு ராமகிருஷ்ணன் தம் மனைவியுடன் கிளம்பினார்.

வாசலில் கை ஆட்டும் போது ராமகிருஷ்ணன் சொன்னார் : "ரொம்ப துறுதுறுன்னு இருக்கு உங்க குழந்தைகள். கண் படப் போறது. முதல்ல திருஷ்டி சுத்திப் போடுங்க."

நான் என் மனைவியைப் பார்த்தேன். அவள் என்னைக் கெஞ்சுவது போல் பார்த்தாள்.




## 48. லங்கேசன் மதியிழந்தான்!

**ப**ஞ்சவடி யுத்தத்தில் அரக்கர் கூட்டத்தில் பிழைத்து ஓடியவர்களில் ஒருவனான அகம்பனன் இலங்கைக்குச் சென்று ராவணன் சந்நிதியில் நின்று, ''ஜன ஸ்தானத்தில் இருந்த நம்முடைய ஜனங்கள் அநேகமாக எல்லாரும் மாய்ந்து போனார்கள். ஜனஸ்தானம் அழிந்தது. நான் எப்படியோ தப்பி வந்தேன்'' என்றான்.

இதைக் கேட்டதும் ராவணனுக்குப் பெருங் கோபம் பற்றி எரிந்தது. ''யாரடா என் அழகிய ஜனஸ்தானத்தை அழித்தது? யமனா? அக்கினியா? விஷ்ணுவா? யமனையும் கொல்லுவேன், அக்னியையும் சூரியனையும் சேர்ந்தாற் போல் எரித்து விடுவேன், வாயுவையும் அசையாது மடக்கி நிறுத்துவேன். நான் இருக்க யார் ஜனஸ்தானத்தை அழித்து என் ஆட்களைக் கொன்றது? சொல், உடனே'' என்று அடங்காத கோபம் மேலிட்டு ராவணன் எழுந்தான்.

ராக்ஷசேந்திரனுடைய கோபத்தைப் பார்த்து பயந்த அகம்பனன், ''அபயம் தந்தால் சொல்கிறேன், கேட்பாய்'' என்றான்.

பிறகு அகம்பனன் நடந்த நிகழ்ச்சிகளைச் சொன்னான். ''தசரத மகாராஜாவின் குமாரன் ராமன் என்கிற வீரன், சிம்மத்தையொத்த யுவன், பெரும் புகழ் பெற்ற ராஜகுமாரன், மானிடர்களுக்குள் அவனுக்குச் சமானமான பல பராக்கிரமம் பெற்றவர் யாருமில்லை, அவன் பஞ்சவடியில் கரனையும் தூஷணனையும் யுத்தம் செய்து வதம் செய்து விட்டான்'' என்றான்.

ராக்ஷசாதிபதி விஷப் பாம்பைப் போல் சீறி, ''என்ன நீ சொல்லுவது? இந்திரனும் தேவ கணங்களும் நீ சொன்ன இந்த ராமனுக்குச் சகாயமாக வந்து யுத்தம் செய்தார்களா?'' என்றான்.

''மகாராஜாவே! அப்படியொன்றுமில்லை. ராமன் ஒருவனே நம்முடைய முழு சேனையையும் சேனைத் தலைவர்களையும் கரனையும் தூஷணனையும் கொன்றான். அவன் செலுத்திய பாணங்கள் ஐந்து தலைப் பாம்புகள் போல் அரக்கர்கள் ஓட ஓடத் துரத்திக் கொண்டு போய் எங்கிருந்தாலும் தொடர்ந்து போய் அவர்களைக் கொன்றன.'' இவ்வாறு சொல்லி ராமனுடைய பாணங்களின் வேகத்தையும் அவனுடைய அபார சக்தியையும் விவரித்துச் சொன்னான்.

தசரதன் மகன் ராமன், தம்பி லக்ஷ்மணனுடன் பஞ்சவடியில் இருந்து கொண்டு வேறு உதவியின்றி இந்தக் காரியத்தைச் செய்தான். அவர்களுக்குச் சகாயமாக எந்த தேவரும் வரவில்லையென்று அகம்பனன் சொன்னவுடனே, ''சரி, இப்போதே நான் புறப்படுகிறேன். இந்த இரண்டு மனிதப் பூச்சிகளை நசுக்கி விட்டுத் திரும்புகிறேன்!'' என்று ராவணன் எழுந்தான்.

''வேண்டாம், நில்!'' என்று அகம்பனன் ராவணனை நிறுத்தி, ராமனுடைய பல பராக்கிரமத்தை நன்றாக

விளக்கினான். விளக்கி விட்டு, ''நான் சொல்லுவதைக் கேள். இந்த ராமனை யுத்தம் செய்து வெற்றியடைய முடியாது. யாராலும் முடியாது. உன்னாலும் முடியாது. அபயம் தந்தபடியால் இப்படி உண்மையைத் தைரியமாக அரசன் முன்னிலையில் சொல்லத் துணிந்தேன். அவனைக் கொல்லுவதற்கு வழி ஒன்றே. அவனுடைய மனைவி அவனுடன் இருக்கிறாள். உலகத்தில் அவளுக்குச் சமானமான அழகி வேறு இல்லை. அவளை எப்படியாவது நீ தூக்கி வந்து விட்டாயானால் அவளை விட்டுப் பிரிந்து ராமன் உயிர் வைத்திருக்க மாட்டான். இறந்து போவான். அவள் மேல் அவனுக்கு அபாரமான காதல். அவளைக் காணாமல் பிரிந்தானானால் உயிரை நீப்பான் என்பது நிச்சயம். இதைச் செய்ய வழி தேடுவாய். யுத்தம் வேண்டாம்'' என்றான்.

சீதையின் அழகைப் பற்றிக் கேட்டதும் அரக்கனுக்கு ஆசை வளர்ந்து விட்டது. அகம்பனன் சொன்னதை மிகவும் ருசித்தான். ''நாளைக் காலையில் ரதம் ஏறிப் புறப்பட்டுப் போகிறேன். நீ சொல்லும் யோசனை மிகச் சரியானது'' என்றான்.

அவ்வாறே ராவணன் கோவேறு கழுதைகள் பூட்டிய தன் ரதத்தில் ஏறி ஆகாய மார்க்கமாகச் சென்றான். மேகங்களுக்கிடையில் அந்தத் தங்க மயத் தேரானது சந்திரனைப் போல் பிரகாசித்தது. நேராக மாரீசன் ஆசிரமத்துக்குச் சென்றான்.

மாரீசன் ராக்ஷஸ அரசனுக்கு எல்லா உபசாரமும் முறைப்படி செய்து விட்டு, ''என்ன விசேஷம், இவ்வளவு அவசரமாக வந்தது?'' என்று விசாரித்தான்.

''பிரிய மாரீசனே, என்னை நீதான் காப்பாற்ற வேண்டும். ஜனஸ்தானம் அழிந்து விட்டது. நம்முடைய சேனை நிர்மூலமாய் விட்டது. இதுவெல்லாம் தசரதன் மகன் ராமன் என்பவனுடைய காரியம். அற்புதமாகத்தான் இருக்கிறது! பழிவாங்க அவனுடைய மனைவியை நான் தூக்கிப் போக நிச்சயித்திருக்கிறேன். அதற்கு உன் யோசனையும் உதவியும் வேண்டும்'' என்றான் ராவணன்.

''என்ன வேலையில் இறங்கினாய், ராவணா? எவனோ உன் பகைவன் உனக்குச் சர்வ நாசம் உண்டாக்கச் சிநேகிதனைப் போல் பாசாங்கு செய்து இந்த யோசனையை உனக்குச் சொல்லியிருக்கிறான். ஏமாந்து அழிந்து போகாதே! சீதையை அபகரிக்கும் யோசனை உனக்கு யார் சொன்னது? அரக்க சமூகத்தின் நாசத்தை விரும்பியார் உனக்கு இந்தத் துராலோசனையைச் சொன்னது? சும்மா இருக்கும் பாம்பின் வாயில் கைவிட்டு விஷப் பல்லைப் பிடுங்கப் போய்ச் சாகும் யோசனை. திரும்பிப் போய் உன் மனைவிகளுடன் சுகமாக இரு. பைத்தியக்காரன் மாதிரி ராமன் மனைவியை விரும்பாதே! அழிந்து போவாய். ராமனுடைய கோபத்தைத் தூண்டிக் குல நாசம் சம்பாதித்துக் கொள்ளாதே'' என்றான், அறிவாளியும் அனுபவப்பட்டவனுமான மாரீசன்.

மாரீசன் சொன்னதைக் கேட்டு தசக்ரீவன் இலங்கைக்குத் திரும்பிப் போனான். மாரீசன் சொன்ன புத்திமதி ராவணன் மூளையில் சரியாகவே புகுந்தது. அந்தச் சமயம் ராவணனுக்குத் தான் பெற்ற வரத்தில் தவறிப்போன விஷயம் தோன்றியிருக்கும். மானிட ஜாதியைப் பற்றித் தான் வரம் பெறவில்லை என்பதையும் ராமனுடைய பாணங்களினால் ஜனஸ்தானத்துச் சேனையும் கரன், திரிசிரன், தூஷணன் முதலிய மிகப் பெரிய வீரர்கள் அனைவரும் தோல்வியடைந்து மாண்டதையும் நினைத்து, ராவணன் மாரீசன் சொன்னதைச் சரியென்று ஒப்புக் கொண்டதாக நாம் எண்ணலாம்.

விதி இந்த முடிவோடு நிற்கவில்லை. ராவணன் தன்னுடைய சிம்மாசனத்தில் உட்கார்ந்திருந்தான். நெய் விட்டு வளர்த்த அக்கினியைப் போல் அவன் தேஜஸ் ஜொலித்துக் கொண்டிருந்தது. யாராலும் ஜெயிக்க முடியாத வீரன். தேவாசுரர்களோடும் மற்றவர்களோடும் செய்த யுத்தங்களில் சக்ராயுதத்தாலும் யானைகளின் தந்தங்களாலும் உண்டான காயங்களின் வடுக்கள் அவன் கம்பீரத் தோற்றத்தை இன்னும் அதிக கம்பீரமாகப் பிரகாசிக்கச் செய்தன. ராவணனுடைய பல பராக்கிரமத்துக்கு எல்லையில்லை. அதருமத்துக்கும் எல்லையில்லை. தேவர்களைத் துன்பப்படுத்துவதிலும் யாகங்களைக் கெடுப்பதிலும் பரஸ்திரீகளை பலவந்தம் செய்வதிலும் கோபாவேசமாக

ராஜாஜி

இன்னும் பலவித அக்கிரமங்கள் செய்வதிலும் அவனுக்குச் சமானமான துஷ்டன் யாருமே இல்லை. அவனைக் கண்டு தேவாசுர கணங்கள் அளவற்ற பயம் கொண்டிருந்தார்கள். எல்லாப் பிராணிகளையும் வாட்டிக் கதறச் செய்யும் சுபாவம் கொண்டவன். சகலவிதமான செல்வமும் போக்கியமும் அடைந்து அசகாய சூரனாக விளங்கி இலங்கையை மரண பயமின்றி ஆண்டு வந்தான். பத்துத் தலைகளும் விசாலமான கண்களும் இவற்றுக்கு ஈடாக மற்ற அவயவங்களும் கொண்ட பயங்கர சொரூபத்துடன் எல்லா ராஜ லக்ஷணங்களும் அவனிடம் விளங்கின. திவ்விய ஆடையாபரணங்கள் அணிந்து மந்திரிகள் சூழ சிம்மாசனத்தில் உட்கார்ந்திருக்கும் போது திடீரென்று சபையில் அதிர்ச்சியுண்டாக்கிக் கொண்டு அவனுடைய உடன் பிறந்தவளான சூர்ப்பணகை மூக்கறுந்த அவலக்ஷண சொரூபத்துடன் சபைக்குள் பிரவேசித்தாள்.

“மூடனே! செல்வச் செருக்கிலும் கிராமிய போகத்திலும் மூழ்கிப் போயிருக்கிறாய். வரப் போகும் கஷ்டத்தை முன்பே தெரிந்து கொள்ள வேண்டிய ஸ்தானத்திலிருந்து கொண்டு, கெடுதி வந்த பிறகும் தெரிந்து கொள்ளாமலிருக்கிறாய். அற்ப சுகங்களில் மனத்தைப் பறி கொடுத்த அரசனை, குடிகள் மதிக்க மாட்டார்கள். மரண பயமில்லாமலிருந்தால் மட்டும் போதுமா? செய்ய வேண்டிய காரியங்களைக் காலத்தில் கவனிக்காத அரசனுடைய ராஜ்யம் பாழாகப் போகும். சாரர்களைச் சரியாக உபயோகித்து ராஜ்யத்தில் நடக்கும் நிகழ்ச்சிகளை அறிந்து கொள்ளாத அரசன் அழிந்து போவான். உன்னுடைய ராஜ்யத்தில் என்ன நடந்தது, ஜனஸ்தானத்தில் உன்னுடைய பந்துக்களுக்கு என்ன ஆயிற்று, உன்னுடைய சேனைக்கு என்ன நேரிட்டது என்பதை நீ அறியாமல் சிம்மாசனத்தில் அழகாய் உட்கார்ந்து கொண்டிருக்கிறாய். உன்னுடைய பகைவர்கள் உன்னை அழிப்பதற்குச் சமயம் எப்போது வரும் என்று காத்துக் கொண்டிருக்கிறார்கள். இது உனக்குத் தெரியும். ஆன போதிலும் நீ உன் சாரர்களைக் கேட்டு என்ன நடந்தது என்று தெரிந்து கொள்ளாமல் கிடக்கிறாய். உன் மந்திரிகள் அறிவற்ற பாமரர்களாக இருக்கிறார்கள். ஜனஸ்தானத்தில் உன்னைச் சேர்ந்தவர்கள் - நம்முடைய எதிரிகள் நடுங்கும்படியாக உன் ஆக்ஞையின் படி இவ்வளவு காலம் அரசு புரிந்து வந்தவர்கள் - இப்போது மாண்டு கிடக்கிறார்கள். இதை உணர்ந்தாயா? ஜனஸ்தானத்துச் சேனை நிர்மூலமாயிற்று; ராமன் என்ற ஒரு மனிதப் பூச்சி தரை மேல் நின்று தேரும் யானையுமில்லாமல் அவ்வளவு பேரையும் கொன்று விட்டான்.

“உனக்கு இது அவமானமாகப் படவில்லையே! உன் தங்கைக்கு என்ன ஆயிற்று என்று பார்த்தாயா? விசாரித்தாயா? இதுவரையில் உனக்கும் உன் ஆட்களுக்கும் பயந்து நடுங்கி வாழ்ந்த ரிஷிகளுக்கு இந்த ராமன் அபயம் கொடுத்து விட்டான். உன்னுடைய ஜனஸ்தானம் பாழாயிற்று. தண்டகாரண்யத்தில் உன்னைப் பற்றியிருந்த பயம் முற்றிலும் தீர்ந்து போயிற்று. தன்னைத் தானே பாராட்டிக் கொண்டிருப்பதோடு திருப்திப்பட்டுக் கிடக்கும் உனக்கு ஆபத்து நெருங்கி விட்டது. உன்னை உன் குடிமக்கள் இனி மதிக்க மாட்டார்கள். ராஜ்யத்திலிருந்து துரத்தப்படுவாய் என்பது நிச்சயம். கட்டிக் கிழிந்து போன துணியைப் போலத்தான் இனி உன்னை மக்கள் மதிப்பார்கள்.

“சாரர்கள் வழியாக ராஜ்யத்தில் நடப்பதை அறிந்து கொண்டு வேண்டியதைச் செய்பவனே அரசன். உன் ராஜ்யத்தில் உன் ஜனங்களுக்கு உண்டான கஷ்டத்தையாவது அவமானத்தையாவது நீ அறியவில்லை. நீ எப்படி அரசனாக மதிக்கப்படுவாய்? உனக்குக் கோபமில்லை. கோபமில்லாத அரசன் என்னத்துக்கு உதவுவான்?

“கரனையும் திரிசிரனையும் தூஷணனையும் கரனுடைய முழு சேனா பலத்தையும் கொன்று நிர்மூலமாக்கி விட்ட ராமனுக்கு சீதை என்ற ஒரு மனைவியிருக்கிறாள். காட்டில் அவனோடு தனியாக இருக்கிறாள். அவள் அழகை என்னென்று சொல்லுவேன்! தேவ கந்தர்வ யக்ஷ கின்னர மனுஷ்ய ஜாதிகளில் இந்த அழகை இதுவரையில் நான் கண்டதில்லை. உனக்கேற்ற பார்யை. அவளைக் கண்டதும் அவள் உன்னுடைய பொருள் என்று நான் நிச்சயித்தேன். ராக்ஷச குலத்தைச் சேர்ந்த நான் ஒரு எண்ணம் கொண்டதும் அதை உடனே நிறைவேற்றுவது தானே என் சுபாவம். உனக்காக நான் அவளைத் தூக்கி எடுத்துவர முயற்சி செய்தேன். பக்கத்திலிருந்த அந்த ராமனுடைய தம்பி லக்ஷ்மணன் தடுத்து, என்மேல்

பாய்ந்து இப்படி என் அங்கங்களை அறுத்து அவமானப்படுத்தி விட்டான். உனக்காக நான் இந்நிலைமையை யடைந்தேன். இப்பழியைத் தீர்த்து உன் குலத்தின் மானத்தைக் காப்பாற்ற உனக்கு ஆசை இருந்தால் உடனே புறப்படு.

''என் பழி எப்படியாயினும், உனக்குத் தகுந்த அழகியைச் சம்பாதித்துக் கொள். சீதையைப் போன்ற அழகியை நீயன்றி வேறொருவன் அனுபவிக்கலாமா? அவளை நீ அடைந்து ராமனை அவமானப் படுத்தினாயானால் அநியாயமாய் மாண்ட உன் வீரர்கள் திருப்தியடைவார்கள். அவர்கள் எனக்குச் செய்த அவமானத்துக்குப் பழி தீரும். உன் சக்தி உனக்குத் தெரியாமல் கிடக்கிறது. சீதையை எளிதில் அடைந்து அனுபவிப்பாய். உன் குலத்திற்கு ஏற்பட்ட அவமானத்தைக் கவனிக்காமல் நீ இருக்கலாமா? ராமனை எதிர்த்த கரனும் தூஷணனும் ஜனஸ்தானத்தில் மடிந்தார்கள். அதையும் நினைவில் வைத்து யோசித்துச் செய்ய வேண்டியதைச் செய். உன் சகோதரி அடைந்த அவமானம் உன்னுடைய அவமானமாகும். நம்முடைய குலத்தில் உனக்குள்ள கவுரவத்தைக் காப்பாற்றிக் கொள்'' என்றாள் சூர்ப்பணகை.

உடன் பிறந்தவள் இவ்வாறு திடீர் என்று பிரவேசித்துத் தன்முன் நின்று இடித்துச் சொன்ன பேச்சுக்களையும் சீதையைப் பற்றி ஆசை பொங்கும் பேச்சையும் கேட்டு, மந்திரிகளிடம் சபை முடிந்தது என்று சொல்லிவிட்டு, தனியாக யோசிக்கப் போனான். மாரீசன் சொன்னது நினைவிலிருந்தபடியால் யோசிக்கலானான். நன்மை தீமைகளை நன்றாக மனத்தில் சோதித்து ஒரு முடிவுக்கு வந்து விட்டான். விமான சாலைக்குச் சென்று தேரோட்டிக்குச் சொன்னான். ''உடனே ரதம் தயாராகலாம். யாருக்கும் தெரிய வேண்டியதில்லை'' என்றான்.

பிசாசு முகங்கள் கொண்ட பருத்த கோவேறு கழுதைகள் பூட்டிய அவனுடைய சுவர்ண ரதம் தயாராக நின்றது. அதில் ஏறி ஆகாய மார்க்கமாகக் கடலும் நாடும் நகரங்களும் வளங்களும் எல்லாவற்றையும் வெகு வேகமாகத் தாண்டிச் சென்றான். இஷ்டப்பட்ட இடம் செல்லும் மாயரதம் போகும்போது கீழே அவன் பார்த்த வசந்தகாலக் காட்சிகளெல்லாம் அவனுடைய காமத்தை அதிகரித்தன.

மாரீசனுடைய ஆசிரமத்தை அடைந்தான். ஜடையும் மரவுரியும் தரித்து ஆசார நியமத்துடன் விரத வாழ்க்கை நடத்தி வந்த மாரீசனைக் கண்டான்.

ராக்ஷசேந்திரனும் தனக்கு பந்துவு மான ராவணனைக் கண்டதும் முறைப்படி உபசாரம் செய்து விட்டு, ''மறுபடி சொல்லாமல் இவ்வளவு தூரம் வந்த விசேஷமென்ன?'' என்று கேட்டான்.

பேச்சில் வல்லமை பெற்ற ராவணன் சொல்ல ஆரம்பித்தான் :

''நான் பெருந் துன்பத்தில் சிக்கித் துயரப்பட்டுக் கொண்டிருக்கிறேன். என் துயரத்தை நீ தான் நீக்க முடியும். உன்னைச் சரண் புகுந்தேன். என் ஆக்ஞையின்படி என் உடன் பிறந்தவர்கள் ஜனஸ்தானத்திலிருந்து கொண்டு என் காரியத்தை நடத்தி வந்தது உனக்குத் தெரிந்த விஷயம். அவர்களும் அவர்களுக்குச் சகாயமாக இருந்த வீரர்களும் இவ்வளவு காலம் ஜெயப்பிரதமாக அங்கே அரசு புரிந்து வந்தார்கள். இப்போது ராமன் என்பவன் அத்தனை வீரர்களையும் முழு சேனையையும் அனாயாசமாகக் கொன்று தொலைத்து விட்டான். தேராவது வேறு வாகனமாவது இல்லாமல் தரை மேல் நின்று



அந்த மனிதன் நம்மவர்கள் அனைவரையும் பாணங்களைச் செலுத்திக் கொன்று விட்டான். தண்டகாரண்யத்தில் இப்போது ராக்ஷசர்களைப் பற்றி பயமேயில்லாமல் ரிஷிகளுடைய கொண்டாட்டமாக இருக்கிறது. இந்த ராமனானவன் தகப்பனால் காட்டுக்குத் துரத்தப்பட்ட வகையில்லாத நீசன். மனைவியையும் கூட்டிக் கொண்டு காட்டில் நாடோடி வாழ்க்கை நடத்துகிறான். இந்தத் துஷ்டன் தவவேஷம் போட்டுக் கொண்டு இந்திரியானுபவத்தில் ஈடுபட்டிருப்பவன், தரும மார்க்கத்தை விட்டவன், அற்பன், கொடுஞ் சுபாவம் கொண்டவன், எந்தக் காரணமு மின்றி மிருக பலத்தின் அகங்காரத்தால் என் உடன் பிறந்தவளுடைய மூக்கையும் காதையும் அறுத்து நம் குலத்துக்குப் பெருத்த அவமானம் இழைத்திருக்கிறான். கோரமான முறையில் துன்பமும் அவமானமுமடைந்த என் உடன் பிறந்தவள் இதைப் பற்றி முறையிடுகிறாள். நான் இதையெல்லாம் பார்த்துக் கொண்டு சும்மா இருந்தேனானால் நான் அரசன் ஆவேனா? இந்தப் பழியைத் தீர்க்க இந்த ராமனுடைய மனைவியை தண்டகாரண்யத்திலிருந்து தூக்கிப் போவதாக நிச்சயித்து விட்டேன். இந்த ராமனைத் தண்டித்து அவமானப் படுத்துவது என் குலக் கடமை. இதற்கு உன் சகாயம் வேண்டும். நீயும் என் சகோதரர்களும் இருக்க எனக்கு என்ன பயம்? உன் உதவியைக் கோருகிறேன். சௌர்யம், பலம், யுக்தி, மாயைகள், இவற்றில் உன்னைப் போல் உலகத்தில் வேறு யார்? உன்னிடம் நான் இதற்காகத்தான் வந்திருக்கிறேன், நீ மறுக்கக் கூடாது. நான் சொல்லுவதைக் கேள். நீ ஒரு பொன்மானாக வேண்டும். சுவர்ணமும் வெள்ளிப் புள்ளிகளும் கண்ணைக் கவரும் விசித்திர வடிவமும் பொருந்திய மானாக உருவம் கொண்டு ராமனுடைய ஆசிரமத்தண்டை வனத்தில் சீதைக் கெதிரில் நீ சஞ்சாரம் செய்ய வேண்டும். ஸ்திரீ சுபாவத்தின்படி அவள் நிச்சயமாக ராமனையும் லக்ஷ்மணனையும் 'இந்த மானைப் பிடித்துத் தர வேண்டும்' என்று வற்புறுத்துவாள். அவளை விட்டு அவர்கள் விலகி அவள் தனியாக இருக்கும் சமயத்தில் நான் சுலபமாக அவளைப் பிடித்துத் தூக்கிப் போய் விடுவேன்.

''சீதை மகா சௌந்தரியம் கொண்ட அழகி. மனைவியை யிழந்த ராமன் மனம் உடைந்து பலவீன மடைவான். அந்த நிலையில் அவனைத் தாக்கி, பழி வாங்கித் திருப்தியடைவேன்.''

இதைக்கேட்ட மாரீசன் முகம் கண்டி வாய் உலர்ந்து ராவணனைக் கண் கொட்டாமல் பார்த்த வண்ணமாக நின்றான். ராமனுடைய பராக்கிரமத்தை அறிந்த மாரீசன் ராவணனுடைய தீர்மானத்தைக் கேட்டு பயந்து போனான். அனுபவம் பெற்ற அறிவாளியும் தவமிருந்து ஓரளவு ஞானமும் ஈசுவர பக்தியும் அடைந்த மாரீசன் பார்த்தான். ராவணனுடைய உள்ளத்தை அறிந்து கொண்டான். விதி இவனைக் கயிறு போட்டு இழுத்துப் போகிறது. இதை இனி தடுக்க முடியாது என்று கண்டு கொண்டான். ராவணன் குலத்தின் கவுரவம், அரசியல் நீதி, சூர்ப்பனகையின் அவமானம் இவற்றையெல்லாம் காரணம் காட்டிப் பேசினானே யொழிய சீதையை அபகரிக்கும் துன்மார்க்க எண்ணத்திலேதான் அவன் புத்தியை இழந்து விட்டான். மாரீசன் அதை நன்றாகத் தெரிந்து கொண்டான்.

சூர்ப்பனகையின் கருத்தையும் நாம் கொஞ்சம் ஆராய வேண்டும். காம வெறியினால் அவளுக்கு அனர்த்தம் ஏற்பட்டது. மூக்கு அறுத்ததும் துன்பப் படுத்தியதும் லக்ஷ்மணன் ஆயினும், ஸ்திரீ சுபாவம், அவன்மேல் அவ்வளவு கோபம் இல்லை. தன் எண்ணம் நிறைவேறாமல் போனதற்குக் காரணம் நடுவிலிருந்த சீதைதான், அவளுடைய அழகும் குணமுமே தன்னைக் கெடுத்தது என்று அவள் பேரில் சூர்ப்பனகைக்கு அதிக ரோஷம் உண்டாகி விட்டது. அவளை அவமானப்படுத்திப் பழி தீர்த்துக் கொள்ள வேண்டும் என்பதே சூர்ப்பனகையின் உள்ளத்தைப் பற்றிக் கொண்ட ஆசை. ராவணனை அந்தக் காரியத்தில் உபயோகிக்கவே அவள் சீதையின் உருவத்தை காமாதுரனான ராவணன் முன் நிறுத்தி அவன் எண்ணத்தை அந்த வழியில் செலுத்தினாள். மற்ற விஷயங்களைப் பற்றிப் பேசியதெல்லாம் சந்து அடைக்கவே. குலத்தின் கவுரவம், பந்துக்கள் உயிர் இழந்தது முதலிய காரணங்களை சேஷ பூரணமாகச் சேர்த்துச் சொல்லி ராவணனுக்கு வழி காட்டினாள். முக்கிய நோக்கம் காமத்தைத் தூண்டி ராவணனை சீதையண்டை போகச் செய்வது. அவனும் இந்த சூழ்ச்சிக்குள் அகப்பட்டுப் போனான்.

(தொடரும்)

# ஐசிஎஸ்



ஐசிஎஸ் R. நடராஜன்
நிர்வாக இயக்குநர்

## பெனிபிட் பண்ட் லிமிடெட்




பதிவு அலுவலகம்: 41B, வெங்கிடசாமி சாலை (மேற்கு)
ஆர்.எஸ்.புரம், கோவை - 641 002 போன்: 48466

வர்த்தக அலுவலகம்: 221, சத்தியமூர்த்தி சாலை, இராம் நகர்,
கோயமுத்தூர் - 641 009. போன்: 37463

50 ஆண்டுகளுக்கு மேலான அரிய சேவை

## டெபாசிட் திட்டங்கள்

| திட்டம் | குறுகிய கால டெபாசிட் | | | பிக்சட் டெபாசிட் திட்டம் | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| காலம் | 1 நாள் முதல் 90 நாள் | 3 மாதங்கள் முதல் 6 மாதங்கள் | 6 மாதங்கள் முதல் 12 மாதங்கள் | 12 மாதங்களுக்கு | 24 மாதங்களுக்கு | 36 மாதங்களுக்கு | 48 மாதங்களுக்கு | 60 மாதங்களுக்கு |
| வட்டி விகிதம் ஆண்டுக்கு | 15% | 16% | 17% | 18% | 18.5% | 19% | 19.5% | 20% |
| வாடிக்கையாளர் வசதிக்கேற்ப 1 மாதம், 3 மாதம் மற்றும் 6 மாத கால இடைவெளிகளிலும் வட்டி விகிதம் வழங்கப்படும். | வழங்கும் வட்டி விகிதங்கள் | ஆண்டுக்கு ஒருமுறை | | 18% | 18.5% | 19% | 19.5% | 20% |
| | | 6 மாதத்திற்கு ஒருமுறை | | 17% | 17.5% | 18% | 18.5% | 19% |
| | | மாதம் ஒருமுறை அல்லது 3 மாதத்திற்கு ஒருமுறை | | 16% | 16.5% | 17% | 17.5% | 18% |

### குமுலேடிவ் டெபாசிட் திட்டம்

- 45 மாதங்களில் இரு மடங்கு
- 68 மாதங்களில் மூன்று மடங்கு
- 90 மாதங்களில் நான்கு மடங்கு

### கபிட்டம் வைப்புத் திட்டம்

| டெபாசிட் தொகை ரூ. | முதிர்வு அடையும்போது பெறும் தொகை | | |
|---|---|---|---|
| | 45 மாதங்கள் | 68 மாதங்கள் | 90 மாதங்கள் |
| 1000 | 2000 | 3000 | 4000 |
| 5000 | 10000 | 15000 | 20000 |
| 7500 | 15000 | 22500 | 30000 |
| 10000 | 20000 | 30000 | 40000 |

**ரூ. 10,000/- செலுத்தினால் 45 மாதங்களில் ரூ. 21,000/- கிடைக்கிறது.**

ரூ.10,000/-ம் அதன் மடங்கில் பணம் செலுத்துவோர் மட்டுமே பங்கு பெற முடியும்.

### ரெக்கரிங் டெபாசிட் திட்டம்

| மாத தவணைத் தொகை ரூ. | காலக்கெடுவில் பெறவுள்ள முதிர்வுத் தொகை | | | | |
|---|---|---|---|---|---|
| | 12 மாதங்கள் | 24 மாதங்கள் | 36 மாதங்கள் | 45 மாதங்கள் | 60 மாதங்கள் |
| 100 | 1320 | 2880 | 4720 | 6480 | 10040 |
| 250 | 3300 | 7200 | 11800 | 16200 | 25100 |
| 500 | 6600 | 14400 | 23600 | 32400 | 50200 |

நகைக்கடன் மற்றும் இரண்டு சக்கர வாகனங்களுக்கு கடனுதவியும் வழங்கப்படும்

ரூ. 5/- செலுத்தி உறுப்பினராகி பயன் பெறுவீர்!

செழுமை தரும் சேமிப்புத் திட்டங்கள்! ஐஸ்வர்யத்தின் அட்சயபாத்திரம் ஐசிஎஸ்!

●● புராதனமான கிடைப்பதற்கரிய 3000 தமிழ் நூல்கள் என்னிடம் உள்ளன. தேவையுள்ளோர் தொடர்பு கொள்க.

– க. ஆவுடையப்பன் செட்டியார்,
27/8 வடக்கு பிள்ளையார் கோவில் தெரு,
விக்கிரமசிங்கபுரம் – 627 425.

---

●● 1959 - 61ல், 7ம்-8ம் வகுப்புகளில் கிருஷ்ணகிரியில் (சேலம் மா.வ.) என்னுடன் படித்த எஸ். ராமநாதனை மறுபடி சந்திக்க ஆவல். அவர் எங்கிருந்தாலும் கடிதத் தொடர்பு கொள்ளுமாறு வேண்டுகிறேன்.

– டாக்டர். என். சச்சிதானந்தம்,
''மவுண்ட் கிளினிக்''
5/86, பட் ரோடு,
பரங்கிமலை, சென்னை – 600 016.

---



●● டாக்டர் ஆர். ஹனுமந்தராவ் எழுதிய ''வானியல்'' என்கிற புத்தகம் அவசியம் தேவைப்படுகிறது. உரிய விலை கொடுத்துப் பெறத் தயார். வைத்திருக்கும் அன்பர்கள் உதவவும்.

– ஏ. கோவிந்தராவ்,
15 A, தட்டாரத் தெரு,
அரியலூர், 621 704.
திருச்சி (மாவ).

---

●● மொஸெய்க் டைல்ஸ் தயாரிக்கும் தொழில்நுட்பம் மற்றும் இயந்திரங்கள் தேவை. விலை மற்றும் இதர தகவல்களுடன் தொடர்பு கொள்ள முகவரி :

– வெ. சம்பத்,
அக்ராவரம் கிராமம்,
குடியாத்தம் தாலுக்கா – 632 601.

---

●● BLIS அல்லது CLIS படித்து வேலையில்லாது இருப்பவர்கள், ''வேலையில்லா நூலகர் சங்க''த்தில் உறுப்பினராக உடன் தொடர்பு கொள்ளவும்.

– எஸ். வேங்கடரமணி,
ஒருங்கிணைப்பாளர்,
விரையன் கோட்டை (அஞ்சல்),
குருவிக்கரம்பை (வழி)
பேராவூரணி வட்டம் – 614 802.

---

●● கு.ப. ராஜகோபாலன் குறித்து நான் எழுதிய நூல் அச்சாகி வருகிறது. முகப்பில் போட கு.ப.ராவின் நிழற்படம் தேவைப்படுகிறது. வைத்திருப்போர் என் முகவரிக்கு அனுப்பினால் நன்றியுடையவனாக இருப்பேன்.

க. முரளிதரனின் ''கூடைக்குள் தேசம்'' பரிமளமுத்துவின் ''இலையுதிர் காலம் நிரந்தரமல்ல'' எனும் இரு ஹைகூ கவிதைத் தொகுதிகளும் ஓர் ஆய்வுக்குத் தேவை. விலைக்குத் தந்தால் பெற்றுக் கொள்கிறேன். அல்லது ஜெராக்ஸ் எடுத்துக் கொண்டு திருப்பித் தந்து விடுகிறேன்.

– டாக்டர் இரா. மோகன்,
இணைப் பேராசிரியர்,
ஒப்பிலக்கியத் துறை,
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்,
மதுரை – 625 021.

---

●● ஒரு செகண்ட் ஹேண்ட் ஆர்மோனியம் தேவை. விலை குறிப்பிட்டு எழுதவும்.

– ஏ. சகாயராஜ்,
மே/பா. ஏ. பீட்டர்,
எல். அபிஷேகபுரம், காலனி,
லால்குடி – 621 601

---

●● Rode Type Thermister (3 kΩ) எங்கு தேடியும் கிடைக்கவில்லை. உதவக் கூடியவர்கள் விலை குறிப்பிட்டு எழுதவும். அனுப்பி வைக்க ஆகும் செலவையும் ஏற்றுக் கொள்கிறேன்.

– பி. ரமேஷ்,
இடையபட்டியான் பட்டி,
வேங்கைக்குறிச்சி (போஸ்ட்),
மணப்பாறை வட்டம் – 621 307.

---

●● என்னிடம் World Book Encyclopedia (A to Z) 20 புத்தகங்கள் புத்தம் புதியவையாக உள்ளன. வாங்க விருப்பமுள்ளவர்கள் தொடர்பு கொள்ளவும்.

– எஸ். சம்பந்தன்,
20, புதுக்குளத் தெரு,
சென்னை – 600 034.

---

(பாலம் பகுதி மூலம் இணையும் வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி காரியாலயம் பொறுப்பேற்க இயலாது. – ஆர்.)

# திருமகள் வெளியீடுகள்

## பாலகுமாரன்

| | ரூ. பை |
|---|---|
| போராடும் பெண்மணிகள் | 22.00 |
| சிநேகமுள்ள சிங்கம் | 40.00 |
| காதல் வெண்ணிலா | 22.00 |
| நானே எனக்கொரு போதிமரம் | 27.00 |
| இனி என்முறை | அச்சில் |
| ஆசை என்னும் வேதம் | 40.00 |
| என் கண்மணி | 22.00 |
| அகல்யா | 24.00 |
| மெர்க்குரிப் பூக்கள் | 42.00 |
| கரையோர முதலைகள் | 38.00 |
| என்றென்றும் அன்புடன் | 27.00 |
| கானல் தாகம் | 22.00 |
| கந்தரி கண்ணால் ஒரு சேதி | 22.00 |
| பந்தயப் புறா | 46.00 |
| நெல்லுச் சோறு | 38.00 |
| ஒரு வழிப் பாதை | 27.00 |
| தாயுமானவன் | 38.00 |
| முன்கதைச் சுருக்கம் | 30.00 |
| அன்புக்கு பஞ்சமில்லை | 26.00 |
| வன்னி மரத்தாலி | 30.00 |
| ஆசைக் கடல் | 44.00 |
| அடுக்கு மல்லி | 23.00 |
| இரவல் கவிதை | 28.00 |
| ஆனந்த வயல் | அச்சில் |
| சின்ன சின்ன வட்டங்கள் | அச்சில் |
| இனி எல்லாம் சுகமே | " |
| வர்ண வியாபாரம் | " |

## கவிஞர் மு. மேத்தா

| | |
|---|---|
| கண்ணீர்ப் பூக்கள் | 14.00 |
| கனவுக் குதிரைகள் | 13.00 |
| என்னுடைய போதிமரம் | 11.00 |
| திறந்த புத்தகம் | 12.00 |
| இதய வாசல் | 12.00 |
| அவளுக்கு ஒரு கடிதம் | 10.00 |
| ஒரு வானம் இரு சிறகு | 11.00 |

## ஸுலக்ஷணா ராஜகோபாலன்

| | ரூ. பை |
|---|---|
| வண்ண கேக்குகள் இனிய பிஸ்கட்டுகள் (வண்ணப்படங்களுடன் size 24X18 cms) | 30.00 |
| சுவையான இனிப்புகள் செய்முறை | 13.00 |
| சுவைமிக்க உணவுகள் ருசியுங்கள் ரசியுங்கள் | 38.00 |
| சூப், ஸாலட், சாஸ் ஸ்நாக்ஸ் | 15.00 |

## விசாலாட்சி

| | |
|---|---|
| நவீன அசைவ உணவு வகைகள் (Non Veg) | 35.00 |
| சுவையான சிற்றுண்டிகளும் சமையலும் 436 வகைகள்) | 17.00 |
| பழரசம், ஜாம், ஊறுகாய் செய்முறை | 8.00 |
| அப்பளம் வத்தல் வடாம் செய்முறை | 5.00 |

## சாந்தா ஜெயராஜ்

| | |
|---|---|
| நவீன முறை கேக்குகள் (கேக்குகள் அலங்காரம் செய்தல்) | 100.00 |

## அருணா கோபாலகிருஷ்ணன்

| | |
|---|---|
| நாம் அழகாய் இருக்க (Make up) | 30.00 |
| Bueatiful U (English) | 35.00 |
| மங்கையரின் அழகுக் கலை "கபலெட்சுமி" | 8.50 |
| பெண்களுக்குப் பயனுள்ள குறிப்புகள் | 10.00 |
| திருமகள் கோலக்கலை "விசாலாட்சி" | 4.50 |

மற்றும் பிரபல எழுத்தாளர்கள், லெக்ஷ்மி, சிவசங்கரி, கோவி. மணிசேகரன், அப்துல் ரகுமான், ப்ரியா, எண்டமூரி நூல்களும் கிடைக்கும். விலைப்பட்டியலுக்கு எழுதவும்.



# திருமகள் நிலையம்

புத்தகம் வெளியிடுவோர், விற்பனையாளர்கள்
மற்றும் ஏற்றுமதியாளர்கள் :
55, வெங்கட்நாராயணா சாலை,
தி.நகர், சென்னை - 600 017
தொலைபேசி 44 28 99/44 15 59

கேக், பிஸ்கட், ஐஸ்கிரீம், சைவ, அசைவ உணவு வகைகள், பழரசம், ஜாம் செய்முறை வகுப்புகள் நடத்தப்படுகிறது.

விவரங்களுக்கு : 55, வெங்கட்நாராயணா சாலை, தி. நகர்., சென்னை -17.
போன் : 44 32 07

✱ ஏமாற்று வேலை...

# 'ஜெ.'யின் உண்ணாவிரதம் இடைத் தேர்தலுக்குக் கைகொடுக்குமா?

● ஏ.எம். பழனிசாமி, கோவை.

? *தமிழக முதல்வர் காவிரி நீருக்காகச் சாகும் வரை உண்ணாவிரதம் மேற்கொண்டது குறித்து...?*

! உண்ணாவிரதம் படுதோல்வி அடைந்தது ஒருபுறமிருக்கட்டும். தாம் ஏமாந்து விட்டதாக அல்லது ஏமாற்றப்பட்டு விட்டதாக அவர் கூறியிருக்கலாம். ''தமிழர்கள் ஏமாற்றப்பட்டு விட்டார்கள்'' என்பது ஏமாற்று வேலையே!

● எம். குணசேகரன், வேலாயுதம்பாளையம்.

? *''முதல்வர் ஜெயலலிதா ஓராண்டுக்கு முன்பே தமது பதவியை ராஜினாமா செய்ய முடிவு செய்து விட்டார். நான்தான் அவர் முடிவை மாற்றி, அ.தி.மு.க. அரசைக் காப்பாற்றினேன்'' என்று முன்னாள் ஆளுனர் பீ.என். சிங் கூறியிருப்பது பற்றி?*

! கவர்னர்கள் இப்படி கூட மாநிலங்களுக்குத் தீங்கிழைக்க முடியும் என்று தெரிகிறது!

● மஞ்சுதேவன், பம்பாய் - 81.

? *ஜயான் போதம் கிடையராகப் போகிறாராமே?*

! வாரிசு வந்து அசத்த ஆரம்பித்து விட்டாரே, ஒழிந்து நாளிதழில் His Father's Son என்று கட்டுரை வெளிவரும் அளவுக்கு!

● ஆர். பானு, திருச்சி - 20.

? *'தி.மு.க.வின் அடுத்த வாரிசு ஸ்டாலின் தான்' என்று தி.மு.க. செயலாளர் கிட்டு கூறியிருப்பது குறித்து?*

! தி.மு.க.வில் சில பெரிய புள்ளிகள் கூட நினைப்பது போல கட்சியை ஒரு குடும்பச் சொத்தாகக் கருத முடியாது; வாரிசு உரிமை கொண்டாட முடியாது. ஆனால் தகுதியிருந்து, தொண்டர்களின் ஆதரவும் உட்கட்சித் தேர்தல்களில் இருந்தால் ஸ்டாலின் வாரிசாவதை யாரும் தடுக்கவும் முடியாது.

● ஜி. இந்திரா, திருச்சி.

? *''நூறு பங்காரப்பாக்களும் ஆயிரம் ஹர்ஷத் மேத்தாக்களும் வந்தாலும் ராவ் மதிப்பைக் குறைக்க முடியாது'' என்கிறாரே, மொய்லி?*

! ஒரு பங்காரப்பாவும் ஒரு ஹர்ஷத் மேத்தாவுமே இந்த அளவுக்கு மதிப்பைக் குறைத்து விட்ட பிறகு நூறும் ஆயிரமும் வேறு வேண்டுமாக்கும்!

● ஆர். ரமேஷ்பாபு, விருத்தாசலம்.

? *வெள்ளி விழா படங்களில் நடித்த மோகன் என்ன செய்து கொண்டிருக்கிறார்?*

! திரையுலக சறுக்கு மர விளையாட்டை எண்ணி நொந்து கொண்டிருப்பாராயிருக்கும்!

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி.

? *எம்.ஜி.ஆர். உண்ணாவிரதத்துக்கும் ஜெயலலிதா உண்ணாவிரதத்துக்கும் என்ன வித்தியாசம்?*

! சமாதி பின்னணியும் மூன்று நாட்களும்.

● வி. சிவா, அரசரடி.

? *கல்கா தொகுதி சட்டசபை இடைத் தேர்தலில் காங்கிரஸ் வெற்றி எதைக் காட்டுகிறது?*

! சில காங்கிரஸ்காரர்கள் சொல்லி மகிழ்வது போல் அது ராவ் அரசு மீது நம்பிக்கையை உணர்த்துகிறது என்றால், ராணிப்பேட்டையில் காங்கிரஸ் தோற்றால் அது எதை உணர்த்தும்?

● அப்துல் நஸீர், வலங்கைமான்.

? *தீக்குளித்த தொண்டருக்கு ரூ 50,000 ஜெயலலிதா வழங்கியிருக்கிறாரே?*

! தீக்குளிப்பது முட்டாள்தனம் எனில், அதற்கு ஊக்கமளிப்பது போல் நடந்து கொள்வது அதைவிட!

● பா. நாராயணன், சென்னை - 40. ❑

? *விடுதலைப் போராட்ட காலத்தில் மகாத்மா இருந்த உண்ணாவிரதம்...?*

! 1. நிஜமான உண்ணாவிரதமா என்று

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
பா. நாராயணன்,
268/34 உதயம் காலனி.
அண்ணா நகர், சென்னை - 40.

பிரிட்டிஷ் ஆட்சி கூட சந்தேகம் எழுப்பிய தில்லை. 2. ஒரு பிடிவா தத்துடன் பிளாக் மெய்ல் போன்ற அணுகு முறையில் அவர் அதை மேற் கொண்டதில்லை. துவேஷம் நீங்கவும் அன்பு சுரக்கவும் தாம் செய்யும் பிரார்த்தனை என்ற அளவில்தான் செயல்படுவார். 3. கூடவே நாட்டு மக்கள் ஒவ்வொருவரையும் உள்ளத் தூய்மையுடன் இறைவனைப் பிரார்த்திக்கச் சொல் வார். 4. நோன்பின் போது தமது குறைந்த பட்ச வசதிகளை மேலும் குறைத்துக் கொள்வாரேயன்றி அதி கரித்துக் கொள்ள மாட் டார். ஆன்மசக்தி பெருகும். இவையெல்லாம் மகாத்மாக்களாலே தான் சாதிக்க முடியும்.

● ஏ. எஸ். ராஜ்குமார், மதுரை.

*? மதுரை விமான நிலைய ரன்வேயில் பதினாறு அ.தி.மு.க. தொண்டர்கள் மறியல் செய்ய, விமானம் பயணிகளுடன் சென் னைக்கே திரும்பியிருக்கிறது. போலீசார் நினைத்திருந்தால் இவர்களை அப்புறப் படுத்தியிருக்க முடியாதா?*

! முடியும்தான். ஆனால் அதே மதுரையில் பாண்டியன் எக்ஸ்பிரஸ் கண்ணாடிகள் அடித்து நொறுக்கப் பட்ட போதும் போலீஸார் வேடிக்கை பார்த்துக் கொண்டுதான் இருந்தார்கள். இப் போது காங்கிரஸ் வலையில் அ.தி.மு.க. எம்.பிக்கள் விழுந்து விடாமலிருக்க டில் லிக்குப் போய் பாது காப்பு கொடுக்கிறார் கள்! ஜெ. ஆட்சியில் போலீசாரின் போக்கே விசித்திரமாகத்







* வாரிசு...?



* சறுக்கு மரம்...



* ஆட்சேபணை...



* ஐயோ பாவம்...



* போட்டா போட்டி!



தானிருக்கிறது.

● கே. சோமசேகர், தருமபுரி.

*? இன்றைய நிலைமையில் சிறந்த ஸ்டண்ட் நடிகராக யாரைச் சொல்லலாம்?*

! இந்தக் கிண்டல்தானே வேண்டாங்கிறது!

● எம். பிரபு, குமராட்சி.

*? நீங்கள் எதற்கு தெர்வஸ் ஆகியிருக் கிறீர்கள்?*

! ஆபீஸ் போகும் ரூட்டில் அதே சமயத்தில் கவர்னரோ, முதல்வரோ செல்லும் போது... நல்லவேளை நகம் கடிக்கும் பழக்கம் இல்லை...

● என். ஷண்முகசுந்தரம், சென்னை - 5.

*? 'கால் கட்டு போட்டால்தான் திருந்து வான்' என்று பல பெற்றோர்கள் மகனைப் பற்றிச் சொல்கிறார்களே?*

! ஆங்கிலத்தில் எப்படி சொல்கிறார்கள் தெரியுமா? Marriage can bring out the best in you, or the beast in you என்றுதான்!

● அஷ்ரப் அலி, தக்கலை.

*? ஜெயின் உண்ணாவிரதம் பழனி ராணிப் பேட்டை இடைத் தேர்தலுக்குக் கை கொடுக்குமா?*

! அதையும் மனத்தில் வைத்துக் கொண்டு அரசியல் நோக்கிலும் இருந்த உண்ணா விரதம்தான் என்பதை உண்ணாவிரத வீடியோவைப் பட்டிதொட்டிகளில் காண்பித்து வோட்டு கேட்கும் யோசனை மெய்ப்பிக் கிறது. அரசு இயந்திரத்தின் ஒத்துழைப்புடன் அதிகாரபூர்வமாக நடந்த உண்ணாவிரதத்தைக் கட்சி நோக்கில் தேர்தலுக்குப் பயன்படுத்தக் கூடாது என்ற வாழப்பாடியின் ஆட்சேபணை ரொம்ப நியாயமானது.

● ரம்யா, கோவை.

*? நரசிம்மராவை நினைத்தால் பாவமாக இல்லை?*

! ஆமாமாம். ஹர்ஷத் மேத்தா வைத்த கன்னி வெடி போதாதென்று, மாதவன் வைத்த டைம் பாம் வேறு சரியான டயத்தில் வெடித்து பரிதாபத்துக்குரியவராகத்தான் ஆக்கிவிட்டது அவரை. 'பங்கு மார்க்கெட் ஊழல் தொடர்பாக பல உயர்மட்ட அரசியல்வாதிகளுக்கு அயல்நாட்டு வங்கிகளில் பணம் போடப்பட்டிருக்கிறது; அதைத் தொடர்ந்து ஆராயத் தாம் அனுமதிக்கப் படாததால்தான் ராஜினாமா செய்ய நேர்ந் தது' என்று பா.கூ.குவிடம் மாதவன் கொடுத்த வாக்குமூலத்துக்குப் பின், ராவ் என்ன, காங்கிரஸே ஆளும் தகுதியை இழந்து விட்டது.

● ஆர். எம். முருகநாதன், காரைக்குடி.

*? சிறந்த முட்டாள் யார்?*

! மெட்ரோ சானலில் ராதாரவியின் நிகழ்ச்சி ஒளிபரப்பாகக் காரணமாயிருந்த வர்களா; அல்லது அதைப் பார்த்துச் சகித்துக் கொண்டிருந்த நாமா என்பதில் போட்டா போட்டி!

# உண்ணாவிரத எதிரொலி: கர்நாடகத்தில் எரிமலை!


* ராஜ்குமார்


* வீரப்ப மொய்லி

ஜெயலலிதா உண்ணாவிரதம் ஆரம்பித்தார் என்ற செய்தி கேள்விப்பட்டவுடன் பெங்களூரிலுள்ள தமிழர்கள் கலக்கமடைந்து விட்டனர். எந்த நேரம் என்ன நடக்குமோ, மறுபடி எரிமலை வெடிக்குமோ என்ற டென்ஷன் தமிழர்கள் மத்தியில். ஒன்றரை வருடத்திற்கு முந்தைய கலவரத்தை இன்னமும் யாரும் மறக்கவில்லை.

ஆனால் முதல்வர் வீரப்பமொய்லியின் முதல் நடவடிக்கையே சற்று பயத்தைப் போக்கியது. ''காவிரியின் பெயரால் எந்த அசம்பாவிதமும் நடக்கக் கூடாது. சென்ற முறை கலவரம் நடந்த பகுதிகளில் போலீஸாரின் கண்காணிப்பும் கெடுபிடியும் கடுமையாக இருக்க வேண்டும். ஒரு சின்ன ரகளை கூட எங்கேயும் நடைபெறாத அளவு போலீஸ் கவனமாக இருக்க வேண்டும்'' என்று அறிவித்த மொய்லி, உயர் போலீஸ் அதிகாரிகளை அழைத்துக் கடுமையான உத்தரவு போட்டதன் விளைவு, போலீஸ் பந்தோபஸ்துகள் மிகவும் தீவிரமாக்கப்பட்டன. கலவரம் செய்யக்கூடிய அமைப்புக்களையும் பிரமுகர்களையும் தங்களின் கண்காணிப்பின்கீழ் கொண்டு வந்தனர் போலீஸார்.

அரசியல்வாதிகள் இந்தப் பிரச்னையைப் பெரிதுபடுத்தவே பார்த்தனர். ''நடுவர் மன்றத்தின் இடைக்காலத் தீர்ப்பைக் கர்நாடகம் ஏற்கவே கூடாது. ஒரு சொட்டுத் தண்ணீர் கூட தமிழகத்திற்குத் தரக் கூடாது'' என்று எல்லா வித பேதங்களையும் மறந்து எல்லாக் கட்சிகளுமே ஓரணியில் நின்றன. ஹெக்டே போன்ற உயர்மட்டத் தலைவர்கள் சாமர்த்தியமாய் ஒதுங்கிக் கொள்ள, இரண்டாவது மூன்றாவது கட்டத் தலைவர்கள் காரசாரமான அறிக்கைகளுடன் கன்னட மக்களின் உணர்வுகளைத் தூண்டி விடவே செய்தனர்.

வாட்டாள் நாகராஜ் போன்ற தீவிரவாதத் தலைவர்கள் நடுவர் மன்றத்தின் தீர்ப்பு நகலுக்குத் தீ வைப்பது, ஜெயலலிதாவின் கொடும்பாவி கொளுத்துவது என்று கிளர்ச்சிகள் ஆரம்பிக்க, விவசாயிகள் சங்கம் சாலை மறியலும் தொடர் உண்ணாவிரதமும் ஆரம்பித்தது. ராஜ்குமார் ரசிகர்கள் சங்கம் வழக்கம் போல் ''தமிழ்ப் படங்களை ஓடவிட மாட்டோம்'' - என்று போராட்டம் அறிவித்தது.

நான்கு நாட்களும் அடிவயிற்றில் நெருப்பைக் கட்டிக் கொண்டிருந்த கர்நாடகத் தமிழர்கள் 'உண்ணாவிரதம் நிறுத்தப்பட்டது' - என்ற செய்தியைக் கேட்டதும் தான் நிம்மதிப் பெருமூச்சு விட்டனர். தற்போது எரிமலை அடங்கியிருக்கிறது. மறுபடி அது வெடிக்காமலிருப்பது என்பது இரு முதல்வர்களும் மத்திய அரசும் இணைந்து சாணக்கியத்துடன் நடந்து கொள்வதைப் பொறுத்திருக்கிறது.

– பெர்னாண்டஸ்

---

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka

THE GINSENG HEALTH

# உங்களால் முடியும்!



நீங்கள் வாலிபத்தில் துள்ளித்திரிந்த அந்த இளமையான நாட்கள் நினைவிருக்கிறதா ? ஆம், உடலும் உள்ளமும் முறுக்கேறி இருந்த நாட்கள். அந்நாட்களை திரும்ப பெற வேண்டுமா ? உபயோகியுங்கள் **வினோஃபிட் ஜின்செங்***

**வினோஃபிட்-ல்** கொரியாவின் ஜின்செங் மற்றும் இன்றியமையாத மூலிகைச் சாறுகள் சேர்ந்துள்ளதால் உடலின் இரத்த ஓட்டம், ஜீரண சக்தி மற்றும் இன்றியமையாத உறுப்புகளின் செயலாற்றம் மேம்படுத்தப் படுகிறது. மேலும், சோர்வு குறைந்து உடலில் சக்தி அதிகரிக்கிறது.

இதைத்தவிர, **வினோஃபிட்** சருமத்தை எழிலுடையச் செய்து, நோய்களை எதிர்க்கும் திறனை உடலிற்கு அளித்து மூளையின் செயலாற்றலை அதிகரிக்கிறது.



* **வினோஃபிட்** ஜின்செங் கேப்ஸ்யூல் மற்றும் டானிக் சகல மருந்துக் கடைகளில் கிடைக்கும்

"வாழ்க்கையை முழுமையாக வாழத் தெரிந்து கொள்ளுங்கள்" என்ற **இலவச வினோஃபிட்** ஜின்செங் பிரசுரத்தைப் பெற கீழ்காணும் கூப்பனைத் தெளிவாக பெரிய அச்செழுத்துக்களில் நிரப்பு செய்து தபால் பெட்டி எண் 5581, சென்னை 600014, என்ற முகவரிக்கு அனுப்பவும்.

(பெரிய அச்செழுத்துக்களில் எழுதவும்)

KAL

பெயர்: ..............................................

முகவரி: ..............................................

..............................................

நகரம்: .............................. பின்: ..............

**வினோஃபிட்**
**ஜின்செங்**

வோக்ஹார்ட் வழங்கும் தரமான தயாரிப்பு

**வாழ்வில் துடிப்புணர்வுடன் வாழ.**

TRITON/93/WL/146 TAM